868
666

# செந்தமிழ்க் கதைகள்

(எட்டாம் வகுப்பிற்கு)




ஆசிரியர் :

வித்வான் எஸ். சிவராமன், எம். ஏ., எல். டி.,

ஊரீஸ் உயர்நிலைப்பள்ளி, வேலூர்.

சௌத் இந்தியா பப்ளிஷிங் ஹவுஸ்

5, தம்பு செட்டித் தெரு, சென்னை-1.

பதிப்புரிமை]

[விலை 90 பைசா

# முன்னுரை

உலகத்து நிகழ்ச்சிகளைப் புலவர்கள் வடமொழி, தமிழ், ஆங்கிலம் ஆகிய மொழி களில் எழுதியுள்ள சில நாடகங்களையும், காப்பியங்களையும் தழுவி ஐந்து கதைகள் இப்புத்தகத்தில் சுருக்கமாக வரையப் பட்டுள்ளன.

உலக நிகழ்ச்சிகளே மக்களுக்கு இன் பந்தருவனவாகும். அத்தகைய நிகழ்ச்சி கள் நிறைந்த இக்கதைகள் படிப்போர்க்கு —மாணாக்கர்கட்கு இன்பந்தரும் என்று கருதியே இவை வெளியிடப்படுகின்றன.

அன்பர்கள் ஆதரிப்பார்களாக.

ஆக்கியோன்.

## பொருளடக்கம்

# 1. கார் காதை

**லியாண்டஸ்** என்பான் சிசிலி நாட்டு மன்னன்; **பாலிக்செனீஸ்** என்பான் **பொஹிமியா** நாட்டு மன்னன். இவ்விரு மன்னர்களும் இளமையில் ஒருங்கு வளர்ந்து, ஒரே பள்ளியில் கல்வி பயின்று நண்பர்களாக இருந்தனர். சிசிலி செல்வமிக்க நகரங்களைப் பெற்றுச் சிறப்புற்று விளங்கியது. பொஹிமியா, மலைகளும் குன்றுகளும் நிறைந்து, செல்வச் சிறப்பின்றி யிருந்ததால் அந்நாட்டு மன்னன் பாலிக்செனீஸ், லியாண்டஸைப் போன்று பெருமையுற்றிலன். நண்பர்கள் இருவரும் பன்னெடுங்காலம் ஒருவரை ஒருவர் காணுதிருந்தனராதலால், பொஹிமியா மன்னன் தன் நண்பனைக் காண விழைந்து ஒருமுறை சிசிலிக்குச் சென்றுன்.

பல்லாண்டுகட்குப் பின்னர் இரு மன்னரும் சந்தித்தபோது அவர்கள் எல்லையற்ற இன்பம் எய்தினர். சிசிலி மன்னன் லியாண்டஸ், அன்பும் அழகும் அமைந்த மாதரசி **ஹெர்மியான்** என்பாளை மணந்திருந்தனன். அவர்களுடைய இளங்குமரன் **மெமிலியஸ்** நற்குணம் வாய்ந்தவனுதலால் பெற்ருேராலும், மற்ருேராலும் பெரிதும் விரும்பப்பட்டான். பாலிக்செனீஸுக்கும், மெமிலியஸின் வயதுள்ள ஓர் அருமந்த மகன் இருக்கிருன் என்பதைக் கேள்வியுற்ற லியாண்டஸ் அகமிக மகிழ்ந்தான்.

பொஹிமியா மன்னன், பல மாதங்கள் நண்பனோடு தங்கியிருந்தபின், தன் நாட்டுக்குத் திரும்பிச் செல்லவேண்டும் என்ற எண்ணங் கொண்டான். தான் இல்லாதபொழுது நாட்டின் நிலை என்னவாயிற்றோ என்று எண்ணித் தன் விருப்பத்தை லியாண்டஸிடம் கூறினன். இன்னும் சிலகாலம் தன்னுடன் தங்கியிருக்கும்படி பாலிக்செனீஸை லியாண்டஸ் வேண்டினன். ஆனால் அவன் அதற்கு இசையவில்லை. எனவே லியாண்டஸ் தன் மனைவி ஹெர்மியானை நோக்கி, "அன்பே! என் நண்பனை இன்னும் சிலகாலம் இங்குத் தங்கும்படி செய்வாயாக," என்று கூறினன்.

பின்னர் அவள் பாலிக்செனீஸை நோக்கி, "என் கணவர் உங்கள் ஊருக்கு வருங்கால், அவர் ஒரு மாத காலம் அதிகமாக அங்குத் தங்கிவிடினும் நான் அதைப் பொருட்படுத்த மாட்டேன். ஆகையால் தாங்கள் இன்னும் சில காலம் இங்குத் தங்குவீராக," என்றாள்.

"அம்மையே! நான் உண்மையாகத் தங்க இயலாதே" என்றான் பாலிக்செனீஸ்.

"உண்மையாகவா? தாங்கள் போகவே கூடாது. தாங்கள் விருந்தினராகவோ அல்லது சிறைவாசியாகவோ மேலும் ஒரு வாரம் இங்கு இருத்தல் வேண்டும். நான் ஒரு பெண்பால் உம்மைக் கேட்கின்றேன் என்பதையும் எண்ணிப் பாரும்" என்றாள் ஹெர்மியான்.

"அப்படியானல், யான் ஒரு விருந்தினனாகவே இங்கு இருக்க விழைகிறேன். 'சிறை வாசி' என்ற சொல் பொருந்தாதே" என்றான் பாலிக்செனீஸ்.

அவ்வாறு கனிவோடு கூறிய இன்சொற்களைக் கேட்ட லியாண்டஸ் அவள்பால் அழுக்காறு கொண்டான். தான் கேட்ட பொழுது மறுத்துப் பின் தன் இல்லாள் வேண்டியபொழுது, பாலிக்-செனீஸ் இணங்கியதை லியாண்டஸ் விரும்பவில்லை. தன் அழுக்காறு காரணமாக அவன் அதைக்குறித்துப் பெரிதுங் கவன்று, தன் மனைவி தன்னிடம் உண்மை யற்றவளாய்ப் பாலிக்செனீஸிடம் காதல் கொண்டு விட்டாள் என்று கருதினன். ஆதலால் அவன் அன்று தொட்டுத் தன் மனைவியையும் பாலிக்செனீ-ஸையும் இரகசியமாகக் கூர்ந்து நோக்கினன். அவன் பொருமை நாளுக்கு நாள் வளர்ந்து, அவன் தான் கருதியதே உண்மை யென்று உறுதிகொண்டான். அவன் தன் பிரபுக்களில் ஒருவனுகிய **கேமில்லோ** என்பானை அழைத்துப் பாலிக்செனீஸை விஷமிட்டுக் கொல்லுமாறு ஏவினன்.

கேமில்லோ பிரபு, "ஐய! அரசி கள்ளமற்ற உள்ளமுடையவர். தாங்கள் அவர்மீது ஐயங் கொள்ளுதல் தகாது; தாங்களே தவறுடையீர்" என்று கூறியும் அரசன் அதை ஏற்றுக்கொள்ள வில்லை. அப்பிரபு அக்கொடிய கட்டளையை நிறைவேற்ற விரும்பாதவனுய், பாலிக்செனீஸிடம் உண்மையை உரைத்தனன். மற்றும் அவன் தன் மீது அரசன் கோபங்கொள்வான் என்று அஞ்சி, அந்நாட்டில் தங்கவும் மனங்கொள்ளாது, அன்று இரவே பாலிக்-செனீஸுடன் அரண்மனையை விட்டு அகன்று, மறைவாகத் துறைமுகத்தை யடைந்து, கப்பலேறி பொஹிமியா போய்ச் சேர்ந்தனன்.

பாலிக்செனீஸூம்,கேமில்லோவும் தம் நாட்டை விட்டு நீங்கித் தப்பிச் சென்றனர் என்பதைக் கேள்வி யுற்ற லியாண்டஸ் மிக்க கோபங் கொண்டான். அவர்கள் அவ்வாறு சென்றது, ஹெர்மியான் உண் மையில் குற்றமுடையவள் என்பதைக் காட்டுவதாக அரசன் கருதினான். அதனைக் குறித்து அவன் சின்னாள் சிந்தித்து, அரசியைத் தண்டிக்க உறுதி பூண்டான். தன் மகன் மெமிலியஸ் அரசியிடமிருந்து அகற்றப் படவேண்டும் என்றும், அவன் அவளை மீண்டும் காணக்கூடாது என்றும் ஆணையிட்டான். அரசியைக் குறித்துப் பரிந்து பேசிய பிரபுக்கள் வேண்டுகோளை அவன் செவிமடுக்கவில்லை.

''அவளைச் சிறைக் கூடத்திற்கு அழைத்துச் செல்லுங்கள்,'' என்று அரசன் போர் வீரர்களை ஏவினன். எனினும் அவன் அவளுடைய பாங்கி மாரை மட்டிலும் அவளுடன் இருக்க அனுமதித் தான்.

அரசியைச் சிறைச்சாலைக்கு அழைத்துச் சென்ற பின், ஒரு பிரபு, ''அரசே! வாழிய! வணக்கம்! அரசி குற்றமற்ற குணக் குன்றுவார் என்பதை மெய்ப்பிக்க என் உயிரையும் விடத் துணிவேன். அவரைச் சிறை வீடு செய்தல் வேண்டும்'' என்று இயம்பினர்.

அன்பும் அறிவும் வாய்ந்த **ஆண்டிகோனஸ்** என்னும் மற்றொரு பிரபு, ''ஐயனே! தாங்கள் செய் வதைச் செவ்விதின் ஆய்ந்துணர்ந்து செய்க. அன்றேல் நீதிநெறி பிழைத்த கொடுங்கோலராவீர். மற்றும் நீரும், அரசியும், உம் புதல்வனும் ஆற்

ருணத்துன்பம் உறுவீர். தாங்கள் உண்மைஉணரும் வரை சிறிது பொறுத்திருக்கலாமே,'' என்று அறிவுறுத்தினர்.

''கேமில்லோ இவ்விடத்தினின்றும் வெளியேறி விட்டதை நோக்குங்கால் என் கருத்து உண்மையானதே என்று தோன்றுகிறது. எனினும், இது குறித்து இரண்டு பிரபுக்களைத் தேவவாக்கைப்பெற டெல்பிக்கு அனுப்பியுள்ளேன்,'' என்ருன், லியாண்டஸ்.

ஆண்டிகோனஸின் மனைவியாகிய பாலினு, அரசியிடம்அன்பும் நம்பிக்கையும்கொண்டிருந்தாள். அவள், அரசி சிறை வைக்கப்பட்டுள்ளாள் என்று கேள்வியுற்று, அவளுக்கு உதவி செய்வதற்காகச் சிறைகூடத்திற்கு விரைந்து சென்ருள். அரசி ஒரு மகவைக் கருவுயிர்க்கும்நிலையிலிருந்ததால்,அவளுக்கு அவ்வமயம் பிறர் உதவி இன்றியமையாததாயிற்று. அதனுல்தான் அரசனும் அவளைச் சுட்டெரிக்காது விட்டனன்போலும்! பாலினுஅச்சிறைக்கூடத்திற்குச் சென்றபோது,அரசியைக் காண இயலவில்லை. அவள் அரசியின் பாங்கி ஒருத்தியைக் கண்டு, சிறையில் அரசி ஒரு பெண் மகவைப் பெற்றுள்ளாள் என்பதை அறிந்தாள். தன் மகன் மெமிலியஸைப் பிரிந்து அவல நிலையிலிருந்த அரசிக்கு அப்பச்சிளங்குழந்தை ஆறுதலளித்தது. ''மாசற்ற மணியே! உன்னைப் போன்று நானும் குற்றமற்றவளே!'' என்று அக்குழந்தையிடம் அரசி கூறினுள்.

பாலினு,அரசியிடம் இரக்கங்கொண்டுஅவளுக்கு அரசன் இழைத்த தீங்கிற்காக மிகுந்த கோபமுற்று

அவன் பிழையை எடுத்துக் காட்ட உறுதி பூண்டாள். மேலும் அரசன் தன் பெண் மகவைக் காணின் அவன் மனம் இளகுமென்றும் எண்ணினுள். "அரசன் குழந்தையைக் காணின் அகங்குழைவான். என் வாய்ச் சொற்களைக் காட்டிலும் குழந்தையின் தூய உள்ளத்தின் அமைதி பெரும்பயனைத் தரும்" என்று பாலினு அரசியின் பாங்கியிடம் பகர்ந்தாள்.

"அம்மையே! தாங்கள் இங்ஙனம் கூறுவது உம் பெருந்தகைமையைத்தான் காட்டுகிறது. இதை நான் அரசியிடம் கூறுகிறேன். இவ்வெண்ணம் அரசிக்கும் தோன்றியுள்ளது," என்ருள் பாங்கி.

இவ்விரு மங்கையரும் கூடிப் பேசுங்கால்,சிறைக் காவலனும் ஆண்டிருந்தனன். குழந்தையைச் சிறையினின்றும் வெளியே எடுத்துச் செல்ல அனுமதியளித்தற்கு அவன் அஞ்சினன். எனினும் அரசன் அவன் மீது கோபங்கொள்ளாதவாறு தான் காப்பதாகவும், தானே அக்குற்றத்தை ஏற்றுக் கொள்வதாகவும் பாலினு அவனிடம் கூறினுள்.

லியாண்டஸ், அத்தாணி மண்டபத்தில் பிரபுக்களும் ஏனையோரும் சூழ வீற்றிருந்தபோது, மனக் கவலை மிக்கவனுய்க் காணப்பட்டான். பாலிக்செனீஸ் சிசிலியை விட்டுச் சென்று விட்டானுயினும், அரசி ஹெர்மியான் இன்னும் அவனுடைய ஆதிக்கத்திலிருந்தாள். அவளைச் சுட்டெரித்துவிடின், அரசன் அமைதியாக இரவில் உறங்கக்கூடும். ஆனல் அரசனுக்கு வேறு துன்பங்களும் இருந்தன. அவனுடைய

குமாரன் மெமிலியஸ் தன் தாய் சிறை வைக்கப்பட்ட நாளிலிருந்து நோய்வாய்ப்பட்டிருந்தான். ஒரு பணியாளன் அரசனிடம்,அவன் குமாரன் உடல்நிலையைப் பற்றிக் கூறுவதற்காக ஆங்கு வந்து, ''ஐயனே! உம் குமாரன் இரவு நன்கு உறங்கினன். இன்னுஞ் சிறிது காலத்தில் அவன் குணமடைவான் என்று கருதப் படுகிறது'' என்று கூறினன்.

''என்ன விந்தை! அவன் வயதில் இளையனு யினும், அவன் பெருந்தகைமையை என்னென்று உரைப்பேன்! தன் தாய்க்குற்ற பழிக்குப் பெரிதும் அஞ்சினனய் அவன் உடல்நலன் குன்றி உணவும் வேண்டாது உள்ளனனே!'' என்றெண்ணினன் மன்னவன். பின்னர் அவன் பணியாளனை நோக்கி, ''நீ மீண்டும் சென்று அவன் இப்பொழுது எந்நிலையிலுள்ளான் என்று கண்டு வா,'' என்று கூறியனுப்பினன்.

அவ்வமயம் பாலின அரசியின் குழந்தையுடன் அத்தாணி மண்டபத்தைக் குறுகினள். ஒரு பிரபு அவள் அரசனிருக்கையை அணுகலாகாதென்றனன். மற்ருெரு பிரபு, ''மன்னவன் உறக்கமின்மையின் உருத்திரங் கொண்டுள்ளான்'' என்றனன். அவர்கள் குரலைக் கேட்ட அரசன். ''வாயிலிடத்தே வந்துள்ளோர் யாவர்?'' என்று வினவினன்.

பாலின, அரசன் அறைக்குச் சென்று, ''ஐயனே! யானே இங்கு வந்துள்ளேன்'' என்ருள்.

''யான் உன்னைக் காண விழையவில்லையே! இங்கு ஏன் வந்தனை?'' என்ருன் மன்னன். பின்னர் அவன் அவளுடைய கணவன் ஆண்டிகோனஸை

யழைத்து,“உன் மனைவி ஈண்டு வருதலாகாது என்று கூறியுள்ளேன். அவளை அடக்கியாள உன்னால் ஆகாதோ?” என்று கேட்டனன்.

“மன்னனே! நான், அவள் இங்குறின், அவள் வருகை உமக்கு உவப்பளியா தென்றுரைத்துள் ளேன்” என்றான் ஆண்டிகோனஸ்.

பாலினா, அரசன் முன் சென்று, “அண்ணலே! யானுரைப்பதை உளங் கொள்வீராக. யான் என்றும் உம்பால் உண்மையுடையவளாவேன். உத்தமியாம் உம் அரசியிடமிருந்து யான் வந்துள்ளேன்,” என்ற னள்.

“உத்தமி! உண்மையாகவா? அவள் உத்தமி யல்லவே” என்றான் அரசன்.

“அரசே! அவள் உத்தமியே. யான் ஆண்மகனா யிருப்பின், என் சொற்களை நிலைநிறுத்தற்கு யாரு டனும் போரிடுவேன்,” என்றாள் பாலினா.

“அவளை வெளியே அழைத்துச் செல்லுங்கள்” என்று அரசன் உத்தரவிட்டான்.

“அரசே! நான் போகிறேன். முதலில் நான் வந்த காரியத்தைச் சொல்லுதல் வேண்டும். உம் அரசிக்கு ஒரு பெண் மகவு பிறந்துள்ளது. உம் ஆசி பெறுவதற்காக அக்குழந்தையை உம்மிடம் அனுப்பி யுள்ளாள்,” என்றுரைத்து, அவள் அக்குழந்தையை அவன் முன்னர்க் கிடத்தினள்.

பாலினா துணிகரமிக்க பெண்மணியானதால் தான், அரசனிடம் உள்ளதை உள்ளவாறு உரைத் தல் வேண்டும் என்றெண்ணினள்.

அரசன் தனக்கு என்ன இடையூறு செய்யினும் அதை அவள் பொருட்படுத்தவில்லை. அப்பெண் மகவு அரசனைப் போன்றே உருவும் எழிலும் பெற்றுள்ளது என்று அவள் கூறியபோது, அரசன் அதற்குச் செவிசாயாது, ஆண்டிகோனஸிடங் கடுங்கோபங் கொண்டு, "நீ ஒரு துரோகி. அக்குழந்தையைக் கொண்டு சென்று கொன்றுவிடுவாயாக. இன்னும் ஒரு மணி நேரத்திற்குள் இதைச் செய்து முடித்தல் வேண்டும்" என்று இடியேறு போன்று இயம்பினன்.

"அரசே! யான் யாதொரு குற்றமும் செய்திலேன். என் மனைவி ஈண்டுற்றதற்கு யான் காரணம் அல்லன்" என்றனன் ஆண்டிகோனஸ்.

"ஆம் அரசே! அவன் குற்றவாளி அல்லன்" என்முன் மற்றுமொரு பிரபு.

"நீவிர் அனைவரும் பொய்யே புகல்கின்றீர்," என்முன் மன்னன்.

"பெருந்தகையே! யாம் உம்முடைய உண்மை ஊழியராவோம். மாசிலா அக்குழந்தை மீது தாங்கள் சீற்றங் கொள்ளாது, அதைக் கொல்லுமாறிட்ட கொடுங் கட்டளையை மாற்றுவீராக" என்றனைவரும் வேண்டினர்.

அரசன், அவர்கள் வேண்டுகோளுக் கிணங்கியவனாய்ச் சிறிது சீற்றந் தணிந்து, "ஆண்டிகோனஸ்! குழந்தையைக் காத்தற்கு நீ என் செய்வாய்?" என்று கேட்டனன்.

"அரசே! எது வேண்டுமாஞலும் செய்வேன். என்ஞல் இயன்றவை யனைத்துஞ் செய்யச் சித்தமாக விருக்கிறேன்" என்ருன் ஆண்டிகோனஸ்.

"நல்லது, அங்ஙனமே செய்வாயாக. செய்யத் தவறினல், நீயும் உன் மனைவியும் கொல்லப்படுவீர். நம் நாட்டிற்கப்பால் வெகுதூரத்தே ஒரு தனியிடத்திற்கு இக் குழந்தையை எடுத்துச் சென்று, அங்கு விட்டு விட்டுத் திரும்பி வருவாயாக" என்று கூறினன். ஆண்டிகோனஸ், அக்கொடிய கட்டளையை நிறைவேற்றுவான் போன்று, குழந்தையைக் கையில் எடுத்துக் கொண்டு, அரண்மனையை விட்டகன்றனன்.

ஆண்டிகோனஸ் சென்றபின்,டெல்பித் தீவுக்குச் சென்ற இரு பிரபுக்களும் அரண்மனையை நோக்கித் திரும்பி வருகின்றனர் என்று ஒரு சேவகன் வந்து கூறினுன். அப்போது அரசியின் விசாரணைக்குத் தக்க ஏற்பாடுகள் செய்யப்பட்டன. பிரபுக்கள் எல்லாரையும் அவைக்கு வருமாறு அரசன் கட்டளையிட்டான். லியாண்டஸ் தலைமை நீதிபதியாக இருந்து விசாரணை தொடங்கியபோது, நீதிமன்றம் நிறைய மக்கள் நிரம்பியிருந்தனர்.

அரசன் உத்திரவுப்படியே ஹெர்மியான் காவல் வீரர்களும், பாலினு முதலிய பாவையரும் சூழ நீதி மன்றத்திற்கு அழைத்து வரப்பட்டாள்.

அரசி ஹெர்மியான், அரசனிடத்தில் உண்மையற்றவளாய் நெறி தவறினவள் என்றும், அரசனைக் கொலை செய்வதற்காகக் கேமில்லோவுடன்சதி செய்

தனள் என்றும், பொஹிமியா மன்னன் பாலிக்செனீ ஸுடம்,கேமில்லோவும் அரண்மனையினின்றும் இரவில் தப்பிச் செல்லுதற்கு உதவி புரிந்தனளென்றும் அவள் மீது குற்றங்கள் சாட்டப்பட்டன.

''எம் தலைவனே! நான் குற்றவாளியல்லள். என் சொற்களைப் பொய்யெனப் புகலுகின்றீர். எல்லாம் வல்ல இறைவனே என் வார்த்தைகளின் வாய்மையை யும், உள்ளத்தின் தூய்மையையும், செயலின் செம் மையையும் சீர்தூக்கவல்லவர். இதற்குமுன் நான் எத்தகையவள் என்பது தாங்கள் நன்கு அறிந்ததே. நான் மரணத்திற்கஞ்சவில்லை, மானத்திற்கஞ்சு கிறேன். ஐயனே! பண்புடைய பாலிக்செனீஸை நான் நண்பனெனக் கொண்டேன். கேமில்லோ உண் மையான உத்தமன். அன்றிரவு அவர் பாலிக்செனீ-ஸுடன் இரகசியமாகச் சென்றதேனோ? உம்மைக் கொலை புரியும் எண்ணம் யான் கொண்டதேயில்லை'' என்றாள் ஹெர்மியான்.

''நீ கொலை செய்யப்படுவதே நீதியும் நேர்மையு மாகும்'' என்றான் லியாண்டஸ்.

''ஐய, நான் இறத்தற்கஞ்சவில்லை. உம்முடைய அன்பை யிழந்த யான் வேண்டுவது மரணமே. யான் என் மகனையும் காணும் மாண்பு பெற்றிலேன். என் மகளும் மரணம் எய்தினள். யான் நோய்வாய்ப்பட்டு வெளிவரா நிலையிலிருந்தும் ஈண்டு கொண்டுவரப் பட்டுள்ளேன். இந்நிலையிலுள்ள யான் ஏன் உயிர்

வாழ்தல் வேண்டும்? யான் வேண்டுவது வாழ்க்கையல்ல, வாய்மையேயாகும். இக்குற்றச் சாட்டை டெல்பி தேவ வாக்கின் தீர்ப்புக்கே விடுகிறேன்," என்றனள் ஹெர்மியான்.

"அப்படியே செய்வோம். டெல்பியிலிருந்து வந்த தூதர்களை அழையுங்கள்," என்று அரசன் ஆணையிட, அத்தூதர்கள் அவ்வாறே அழைக்கப் பட்டனர். அவர்கள் கொண்டு வந்த ஓலையை அரசனுடைய கருமத் தலைவன் பிரித்து, "ஹெர்மியான் குற்றமற்றவள். பாலிக்செனீஸின்மீது வீண்பழி சுமத்தப்பட்டது. கேமில்லோ உண்மையுள்ள பிரபு. லியாண்டஸ் பொறுமை மிக்க கொடுங்கோல் மன்னன். காணாமற்போனதைக் கண்டு பிடிக்காவிட்டால் அரசன் நாடாளும் சந்ததியற்றவனுவான்," என்று படித்தனன். அச்சொற்களைக் கேட்ட அரசியும் பிரபுக்களும் இறைவனைப் புகழ்ந்து போற்றினுர்கள். ஆனுல் லியாண்டஸ் அத் தேவவாக்கை உண்மையென்று ஏற்றுக்கொள்ள இசையாதவனுய், மேலும் அவ்விசாரணையைத் தொடர்ந்து நடத்த விரும்பினுன்.

அச்சமயத்தில் ஒரு பணிமகன் அங்குற்று, "இளவரசர் மெமிலியஸ் இறந்தார்" என்ற செய்தியை அரசனிடத்தில் தெரிவித்தான். அச்செய்தி அரசனுடைய கண்களைத் திறந்தது. அவனுக்கு உண்மை உதித்தது. ஆதலால் அவன் பெரிதும் வருத்தமுற்று, "இறைவன் என்மாட்டுக் கோபங் கொண்டுள்ளார். நான் நீதி முறை வழுவியதற்காக அவர் என்னைத் தண்டித்துள்ளார்," என்று கதறினன்.

அரசி ஹெர்மியானும் தன் மகன் மாய்ந்தான் என்றதைக் கேட்டு உள்ளமுடைந்து உடல் சோர்ந்து மூர்ச்சித்தாள். அதைக் கண்ணுற்ற அரசன்,"என்ன! என்ன!" என்று வருத்தத்தோடு வினவினுன்.

"மகன் இறந்தான் என்ற செய்தி அரசியைக் கொன்றதுபோல் தோன்றுகிறது," என்முள் பாலினு.

"அப்படியா? ஆ! கெட்டேன். அவள் மேல் ஐயங்கொண்டேன்; அருந்துயர் அடைந்தேன். தீவினையேன் யான், பெருந்தவறிழைத்தேன். அவள் மரிக்கவில்லை, மயக்கங்கொண்டுள்ளாள். அவளை வெளியே கொண்டு சென்று ஆவன புரிமின். அவள் ஆருயிர் பெறுவாள்," என்று அரசன் கூறினன்.

உடனே பாலினுவும் பாங்கிமாரும் அரசியை வெளியே கொண்டு சென்றனர். பின்னர் அரசன், "ஆ! தெய்வமே! என்னை மன்னிப்பீராக. என் பிழையைப் பொறுக்குமாறு நான் பாலிக்செனீஸை வேண்டிக் கொள்வேன். அரசியோடு நான் நட்பு பூண்பேன். அவன் சிசிலியை விட்டு நீங்கிய காரணம் இப்போது விளங்குகிறது. பாலிக்செனீஸ் குற்றமற்றவன் என்பதைக் கேமில்லோ அறிந்து, அவனை விஷமிட்டுக் கொல்லாது, எனது வஞ்சகத்தைச் சொல்லி, அவனை இரகசியமாக அழைத்துச் சென்முன் போலும்! அவன் அன்பும், அறனும் மிக்கவன் என்பதை உணர்கிறேன்," என்று அரற்றிப் பெரிதும் வருந்தி யிருந்தனன்.

இவ்வாறு அரசன் வருந்தியிருக்கையில் பாலிஞ, அவன் முன் சென்று அரசி இறந்தாள் என்று உரைத் தாள். அரசன் அதுகேட்டுப் பேசவும் நாவெழாது, ஆற்ருெணுத் துயரங்கொண்டு, ''நான் இத்துன்ப மெல்லாம் அடைதல் சாலவுந் தகும். என் மனைவி யும் மகனும் மரித்துக் கிடக்குமிடத்திற்கு என்னை அழைத்துச் செல்லுங்கள். அவர்களிருவரையும் ஒரே இடத்தில் அடக்கம் செய்து, அவர்கள் சமாதியின் மேல் அவர்கள் மரித்த விதத்தையும் குறிப்பிடுங்கள். நான் அவர்கள் மரணத்திற்குக் காரணமாக விருந் தேன் என்பதை அது காட்டட்டும். என் ஆயுள் முழு வதும் தினமும் ஒரு முறை அவர்கள் சமாதிக்குச் சென்று கண்ணீர் சிந்துவேனுக,'' என்று நவின்ற னன்.

இனி அரண்மனையை விட்டகன்ற ஆண்டி-கோனஸ் நிலையை நோக்குவோம். அவன் குழந்தை யுடன் அரசனுடைய கப்பல் ஒன்றிலேறி, பொஹி-மியா நாட்டை நோக்கிச்சென்ருன். அவன் பொஹி-மியா கடற்கரையில் ஒரு தனியிடத்தை அடைந்து, அரசன் கட்டளையை நிறைவேற்ற வுன்னினன். அவன் குழந்தையின் ஆடை அணிகளும், அளவிறந்த பொன் னும் கொண்ட ஒரு முடிப்பையும் தன்னுடன் எடுத் துச் சென்ருன். அக் குழந்தைக்குப் **பெர்டிடா** எனப் பெயரிட வேண்டும் என்ற செய்தியொன்றும் அம் முடிப்பில் அடங்கியிருந்தது. அப்பெயர் ''காணுமற் போனவள்'' என்று பொருள்படும். முன்னர் அப் பிரபு ஓர் அதிசயமான கனவு கண்டான்; அக்கன வில், அரசி அவன் முன் தோன்றி, ''ஆண்டிகோனஸ்!

உன் விருப்பத்திற்கு மாருக என் குழந்தையைத் தனியிடத்தே விடும் பணி உனக்கு இடப்பட்டிருப்பதால், நீ பொஹிமியாவுக்குப் போவாயாக; அக் குழந்தைக்கும் **பெர்டிடா** என்ற பெயர் இடுவாயாக; நீ மீண்டும் சிசிலியையும், உன் மாண்புமிக்க மனைவி பாலினுவையும் காணமாட்டாய்,'' என்று கூறி மறைந்தாள்.

ஆண்டிகோனஸ், அக் குழந்தையையும் முடிப்பையும் ஆங்கோர் தனியிடத்தில் தரையின்மீது வைத்தபோது, ஒரு பெரிய கரடி அங்குத் தோன்றி, அவனைத் தாக்கிக் கொன்றுவிட்டது. அவ்வமயம் ஓர் ஆயனும், அவனுடைய குமாரனும் அப்பிரபுவின் குரல் கேட்டு ஓடியும் அவனைக் காப்பாற்ற முடியாது போயிற்று. அவ்வாயன், குழந்தையையும், பண முடிப்பையும் கண்டான். அவன் பெற்ற பூணும் பொன்னும் அவனை ஒப்பற்ற செல்வனுகச் செய்யுமன்றே!

ஆண்டிகோனஸ் ஏறிவந்த கப்பல் புயலிடை அகப்பட்டுக் கடலில் மூழ்கவே,கப்பலிலிருந்த மக்கள் அனைவரும் கடலில் மாய்ந்தனர். சிசிலியிலிருந்து வந்த ஒருவரும் ஆண்டு உயிர் பிழைத்துத் திரும்பிச் செல்லவில்லை.

கேமில்லோ, பொஹிமியா மன்னன் பாலிக் செனீஸுடன் பதினறு ஆண்டுகள் தங்கியிருந்தான். சிசிலி மன்னன் லியாண்டஸ், கேமில்லோவை மீண்டும் தன்னுட்டுக்கு வருமாறு அன்போடு அழைத்துத் தான் செய்த குற்றத்தைப் பொறுத்தருளுமாறு வேண்டினன். ஆயினும்

கேமில்லோ, அரசி ஹெர்மியானும், அவளுடைய மகனும் இறந்தனர் என்ற செய்தி கேட்டு வருந்தித் திரும்பவும் தன் நாட்டுக்குச் செல்லாது, பொஹி-மியா மன்னனுக்கு அரசியலில் உதவி செய்து கொண்டு அங்கேயே வசித்து வந்தான்.

பாலிக்செனீஸின் மகன் பிளாரிசெல் காளைப் பருவம் எய்தியிருந்தனன். அவன் அடிக்கடி ஒரு செல்வமிக்க ஆயன் இல்லத்திற்குச் சென்று வரு கின்றான் என்ற செய்தி அரசனுக்கு எட்டியது. அவ்வில்லத்தில் அழகுமிக்க அணங்கொருத்தி யிருந் தனள். பாலிக்செனீஸ் கேமில்லோவுடன் மாறு வேடங்கொண்டு அவ்வாயனுடைய ஊருக்குச் செல் லக் கருதினன். அவ்வாறே அவர்களிருவரும் ஆயன் இல்லத்தை அடைந்தபோது, அங்கொரு விழா நடந்து கொண்டிருந்தது. விழாவிற்கு வருவோர்க் கெல்லாம் விருந்தொன்றும் ஏற்பாடாகியிருந்தது. அவ்வில்லமகள் பெர்டிடா, அவர்களை யெல்லாம் வரவேற்றபோது, பாலிக்செனீஸும், கேமில்லோ-வும் அவளழகையும் அன்பையும் கண்டு வியந் தனர். அவளாடையை நோக்கியபோது, அவள் ஆயர்மகள் என்றெண்ண இடமில்லை. அவள் அருகே யிருந்த பிளாரிசெல் அவளைத் தேவமகள் என்றே கருதினன். பிளாரிசெல்லும், பெர்டிடாவும் ஒருவரை யொருவர் காதலித்துள்ளனர் என்று அவ்வாயர் முதுமகன் அரசனிடம் கூறினன். அவர்கள் எல்லோ ரும் விருந்துண்டபின், ஆடல் பாடல்களால் அகங் களித்தனர்.

இவை முடிந்தபின், பாலிக்செனீஸ் தன் மகனுக்கும், பெர்டிடாவுக்கும் திருமண ஒப்பந்தம் நடைபெறும் என்றறிந்து அதிசயங் கொண்டனன். அவன் அவ்விளைஞனை நோக்கி, "இவ்வாயர் மகளை நீ மணக்கப்போவதை உன் தந்தை அறிவாரோ?" என்று வினவினன்.

"ஐயா! நானே என் மனைவியைத் தேர்ந்து கொள்ளும் பருவத்தைப் பெற்றுள்ளேன். இவ்விஷயத்தில் நான் உறுதியும் கொண்டுள்ளேன்," என்று விடை யிறுத்தனன்.

அதைக் கேட்ட மன்னன் மிகச் சீற்றங்கொண்டு தன் மாறு வேடத்தைக் களைந்தெறியவே, ஆண்டிருந்தோர் அனைவரும் அரசனைக் கண்டு ஆச்சரியங் கொண்டனர்.

மன்னன், "பிளாரிசெல்! நீ ஓர் அரசன் மகனுதற்கு உரியவனல்லன்," என்று வெகுண்டு கூறினன். பின்னர் அவன் அம் மங்கையை நோக்கி, "நீ மீண்டும் அவனுடன் பேசினுல், உயிரை இழப்பாய் என்பதை உறுதியாய் அறிவாயாக," என்று கூறி அவ்விடத்தினின்றும் அகன்றனன்.

பின்னர், அரசன் கோபத்தினின்றும் தப்புவதற்காகப் பிளாரிசெல்லும், பெர்டிடாவும் கேமில்லோவின் ஆலோசனையின்படி, பொஹிமியாவை விட்டு நீங்கி, சிசிலி நாட்டை யடைந்தனர்.

அவ்வாறே ஆயர் முதுமகனும், அவன் குமாரனும் பொஹிமியாவினின்றும் புறப்பட்டுத் தாம் பதினறு ஆண்டுகளுக்கு முன் பெர்டிடாவின் அரு

கில் கண்ட முடிப்பையும், தம் பொருளையும் எடுத்துக் கொண்டு வெளியேறினர்.

ஆண்டில் முதிர்ந்த கேமில்லோ, தன் தாய் நாடு செல்ல வேண்டுமென்று விழைந்தானாதலால், பாலிக்செனீஸிடம் அவன் மகன் சென்றவிடத்தைத் தெரிவித்து, ஒரு கப்பலில் அவனைப் பின் தொடர்ந்து செல்லுமாறு தூண்டினன். அவ்வாறு அரசன் செல்லுங்கால் கேமில்லோவும் அவனுடன் சென்றனன்.

மன்னன் லியாண்டஸ் பதினாறு ஆண்டுகளாகத் தன் மனைவியை மறவாது அவளிடம் அன்புகொண்டிருந்தான். பிரபுக்கள், அவனை மணம் செய்து கொண்டு நாட்டையாளும் ஒரு புதல்வனைப் பெறுமாறு வேண்டினர். ஆனால் பாலினா, அரசன் மணஞ் செய்து கொண்டால், கடவுளரின் கோபத்திற்காளாவான் என்று புகன்றனள். டெல்பி தேவ வாக்குப்படி காணாமற் போனது அகப்பட்டால்,அரசன் நாட்டையாளும் சக்தியைப் பெறுவான் அல்லவா?

பிளாரிசெல்லும், பெர்டிடாவும் சிசிலியை அடைந்து, அரசன் லியாண்டஸ் முன் சென்றனர். அவ்வரசன் அவர்களை அன்போடு வரவேற்றான். அவர்களைக் கண்டபோது, அரசன் தன் மகளும் மகனும் உயிரோடிருந்தால் அவ்வாறே சிறந்து விளங்குவார்கள் என்றெண்ணினன். பிளாரிசெல், அரசனிடத்தில் பெர்டிடா ஓர் இளவரசி என்று கூறிக் கொண்டிருக்கையில், ஒரு தூதுவன் அங்குற்றுப் பொஹிமியா மன்னனும், கேமில்லோவும் சிசிலிக்கு வந்துள்ளனர் என்று கூறினன். பொஹி-

மியா மன்னனுடைய மகன் ஓர் ஆய மகளிடம் காதல் கொண்டு, அவளை யழைத்துக் கொண்டு அங்கு வந்திருப்பதால், அவர்களைத் தேடிக் கொண்டு தான் பொஹிமியா மன்னன் வந்திருப்பதாகவும் அத் தூதுவன் விளம்பினன்.

"இவளோர் அரசகுமாரியா?" என்று லியாண்டஸ் பிளாரிசெல்லைக் கேட்டபோது, அவன், "ஆம்! அவள் என் மனைவியாகுங்கால், ஓர் இளவரசியே யாவள்" என்று விடை பகர்ந்தான்.

"அழகு மிக்க இந்நங்கை உயர் குடிப் பிறப்பின்றி யிருத்தல் வருந்தத்தக்கதே. உன் தந்தை நீ இவளை மணந்து கொள்ளுதற்கு இசையாரே," என்றான் லியாண்டஸ்.

"அரசே! தாங்கள் என் தந்தைபால் கொண்டுள்ள நட்புரிமை கொண்டு,அவர் எங்கள் திருமணத் திற் கிணங்கச் செய்வீராக," என்று பிளாரிசெல் வேண்டினன்.

இதற்கிடையே பாலிக்செனீஸும், கேமில்லோவும் சிசிலி வந்தபோது, ஆயர் முதுமகனையும் ,அவன் மகனையும் கண்டு பெர்டிடாவின் உண்மை வரலாற்றை உணர்ந்து,லியாண்டஸ் அவைக்குச் சென்றனர். தன் நண்பனையும், கேமில்லோவையும் அரசன் அன்போடு வரவேற்றான். பெர்டிடா தன் மகளே என்று அறிந்தபோது அவன் பெருமகிழ்ச்சியுற்றான். எனினும் அவன் தன் மனைவி ஹெர்மியானை நினைந்து உருகினன். தன் மனைவி உயிருடன் இருப்பின் அவளும் அகமகிழ்வாள் என்றெண்ணினன். அவ்

வமயம் பாலினு அவ்விரு அரசர்களையும் அவர்கள் மக்களையும் தன் இல்லத்திற்கு வருமாறு அழைத்து, அரசி ஹெர்மியானுடைய உருவச்சிலை ஒன்றைக் காட்டுவதாகக் கூறினள்.

அவள் அழைப்பிற் கிணங்கிய அனைவரும் அவள் இல்லத்திற்குச் சென்றனர். அவள் அவர்களை ஓர் அறைக்கு அழைத்துச் சென்றாள். அங்கு ஒரு திரைச் சீலையை ஒருபுறம் ஒதுக்கியபோது, அரசி ஹெர்மியா னுடைய சிலை ஒன்று சலவைக் கற்பீடத்தின்மீது இருந்ததை அவர்கள் கண்டனர். சிலையைக் கண்ட சிசிலி மன்னன் திகைத்து நின்றான். அவ்வழகிய சிலை யைக் கண்டு மற்றையோரும் அதனழகில் ஈடுபட்ட வராய் வளாவிருந்தனர்.

பெர்டிடா தன் தாயின் சிலைமுன் முழந்தாள் படியிட்டு அதன் கையை முத்தமிடத் தொடங்கு கையில், பாலினு அவளைத் தடுத்து, அதன்மீது பூசப் பட்ட வண்ணம் இன்னும் உலரவில்லை என்று கூறினள்.

பின்னர் இசை முழங்கியபோது, அவர்கள் எல்லாம் வியக்கும் வண்ணம், அச்சிலை நகர்ந்து சென்று லியாண்டஸைத் தழுவியது. அப்பொழுது பாலினு அச்சிலை உண்மையான ஹெர்மியானே என்று கூறி எல்லோரையும் இன்பக் கடலில் ஆழ்த் தினள். தாயும் சேயும் கரைகாணுக் களிப்பெய்தினர். பெர்டிடா, பிளாரிசெல்லை மணந்து இன்ப வாழ்வை எய்தினள். பல்லாண்டுகட்குப்பின், பொஹிமியாவும் சிசிலியும் ஓரே மன்னன் ஆட்சிக்குட்பட்டன.

---

# 2. வசந்தசேனை

அவந்தி என்னும் அழகு மிகுந்த நாட்டின் தலைநகர் உச்சயினி என்பது; அந்நகர் பண்டைக் காலத்தே பல் வளமும் செறிந்து எழிலொடு விளங்கிற்று. அவ்வணி நகரில் அந்தணர் குலத்தில் தோன்றியவன் **சாகரதத்தன்**; அச்செம்மலின் செல்வக் குமாரன் **சாருதத்தன்** என்பான். அவன் பல கலைகளையும் பயின்றவன். அவன் அந்தணர் குலத் தோன்றலாயினும் வாணிகத் தொழிலைச் செய்து பெரும் பொருள் திரட்டி வளமுற வாழ்ந்து வந்தனன்.

ஊருணி நீர் நிறைந்தாற்போல், நிறைந்த தன் செல்வத்தைச் சாருதத்தன் தக்கார்க்கு ஈந்து சிறப்போடு வாழ்ந்தனன். கலைபயிலறிஞர் தம் நிலையளந்துணர்ந்து அவர்க்கு அருந்துணையாக விருந்தனன். அவன் அன்பு, அருள், கடவுட்பற்று, கண்ணோட்டம் முதலிய பன்னலம் அமைந்து பாங்குற வாழும் நாளில், உருவும் திருவும் வாய்ந்த உத்தமி **தூதை** என்பாளை மணந்தான். இவர்கள் மண வாழ்க்கை மாண்பு மிக்கதாக விருந்தது.

> "மங்கல மென்ப மனைமாட்சி மற்றதன்
> நன்கலம் நன்மக்கட் பேறு"

என்னும் பொய்யா மொழிக்கிணங்க, அத்தூதை **உரோகசேனன்** என்னும் புதல்வனைப் பெற்றனள்.

சாருதத்தன் இல்லறத்தை இனிது நடத்தும் பொழுது வேண்டுவார்க்கு வேண்டுவன அளித்துக்

கொடை மடம் பட்டு, அதன் பயனுகச் செல்வமெல் லாம் இழந்து, வறுமை நிலே யடைந்தனன். இங் ஙனம் அவன் இளமையிலேயே வறுமை யுற்றும் செம்மையிற்றிரியாது வாழ்வானுயினன். தன் வறுமை நிலேயை யுன்னி வருந்தினனுய்த் தன் ஆரு யிர் நண்பனுகிய **மைத்திரேயனிடம்**, ''நண்ப! இன்ப வாழ்க்கை எய்தி யிருந்தவன் வளனெலாம் இழந்து வறியனுயக்கால் நடைப்பிணம் போன்று உழல நேரும். வறுமை, மரணம் ஆகிய இரண்டினுள், மர ணமே விரும்பத்தக்கது. ஏனெனில், மரணத்தைக் காட்டிலும் வறுமையே அதிக துன்பந் தருவதாகும். எல்லாத் துன்பங்கட்கும் முதற் காரணம் பொரு ளின்மையே யாகும். ஆயினும் நான் பொருளேப் பற்றித் துன்பங் கொள்ளவில்லே. என்னிடம் செல்வ மில்லாத காரணத்தால் இரப்பவர் என்னிடம் வராது அகன்று போகின்றனர். அவர்கள் மனம் மகிழுமாறு கொடுக்க இயலாமைக்குத் துன்புறுகின் றேன்,'' என்று பலவாறு கூறித் தன் வறுமை நிலேக் காக வருந்தியிருந்தனன்.

அந்நகரத்தில் **வசந்தசேனே** என்னும் ஒரு கணிகை வாழ்ந்து வந்தனள். அவள் அழகும் ஒழுக்க மும் அமைந்த ஓர் இளநங்கை. அவள் குலமகளிர்க்கு இருக்கவேண்டிய குணமெல்லாம் கொண்டிருந் தனள். அவள் பல்வகை வளனும் பெற்றுத் தன் இல் லத்தில் இருந்து செல்வ வாழ்க்கையை நடத்தி வந் தனள்.

அந் நகர்ப்புறத்தே அழகிய பூங்கா ஒன்று இருந்தது. இளவேனிற் காலத்தில் அந்நகர மக்கள்

அப்பூங்காவிற்குச் சென்று உல்லாசமாகக் காலங் கழித்து வந்தனர். ஒரு நாள் வசந்தசேனை அங்குச் சென்றிருந்தபோது, சாருதத்தன் என்னும் அந்த ணனைக் கண்டு காதலுற்றாள். சாருதத்தனும் அவளழகைக் கண்டு மயங்கினனாயினும் தனது வறுமை நோக்கி வாளாயிருந்தனன்.

அந் நகரத்தரசன் **பாலகனுடைய** மைத்துனன் **சகாரன்** என்பானும் அவள்பால் விருப்பங் கொண்டு, அவள் தன்னை விரும்பாதிருந்தும், தான் அவளை அடைவதற்கேற்ற காலங் கருதியிருந்தனன்.

ஒரு நாள் மாலைக் காலத்தே ஞாயிறு மறைந்து இருள் சூழ்ந்திருந்தபோது, வசந்தசேனை வீதி வழியே சென்றனள். அவ் வமயம் சகாரன் தன் ஏவலாளனுடனும், தோழனுடனும் அவள் பின் சென்று, "வசந்தசேனை! நில், நில்; என்னிடம் அன்பு கொள்வாயாக," என்று பன்முறை வேண்டினன். எனினும், அவள் அவன் சொற்களைப் பொருட்படுத்தாது, அவனிடத்தினின்றும் தப்பும் வழியை நோக்கியிருந்தனள்.

சகாரன் தன தோழனிடம் "ஐய! இவள் சாருதத்தனிடம் காதல் கொண்டுள்ளாள். அவன் இல்லம் இடப்பக்கத்தில் உள்ளது. அவள் தப்பிப் போகாதவாறு காத்திடுக," என்று கூறினன். வசந்தசேனை சாருதத்தனுடைய இல்லம் அருகில் உள்ளதென்றுணர்ந்து மகிழ்ந்தவளாய், மேகத்திடை மறைந்த மின்னலைப் போன்று பேரிருளில் மறைந்தாள். சகாரன் முதலியோர் அவள் அணிகலன் ஓசை, மாலை

மணம் ஆகியவற்றைக் கொண்டு தேட முயன்றனர். ஆகவே அவள் தன் சிலம்புகளைக் கழற்றி, மாலையையும் நீக்கிவிட்டுச் சாருதத்தன் வீட்டின் வாயிலை அடைந்தனள்.

அவ்வமயம் சாருதத்தன் தன் இல்லுறை தெய்வங்களுக்குப் பூசை முதலியன முடித்து மைத்திரேயனை நோக்கி, "நண்ப! இன்று நான் வெளியிற் செல்ல விரும்பவில்லை. நீயே நாற்சந்தி கூடுமிடத்திலுள்ள பிராமி முதலிய தெய்வங்களுக்குப் பலி கொடுத்து வருவாயாக," என்று வேண்டினன். மைத்திரேயன் அவ்வாறே வெளியிற் சென்றனன். அவன் வெளிச்சென்றபோது அங்கிருந்த வசந்தசேனை அவ்வில்லினுட் புகுந்தனள்.

சகாரன், வசந்தசேனையைத் தேடிக் காணாது, தவறாக இரதனியின் கையைப் பற்றினன். பின்னர் அவன் உண்மை யுணர்ந்து, அவளை விட்டு விட்டனன். அப்பொழுது அவன் மைத்திரேயனிடம், "ஏட! வசந்தசேனையை என்னிடம் அனுப்புமாறு நீ சாருதத்தனிடம் சொல்வாயாக" என்று கூறிச் சென்றான்.

தன் வீட்டிற்குள் வந்த வசந்தசேனையைக் கண்ட சாருதத்தன், அவள் உண்மை அன்பை உணர்ந்தவனாய், "இவ்வன்பு தடைப்படாது வளர்வதாக" என்று கூறி உபசரித்தான்.

வசந்தசேனை அச்சொற்கேட்டு மகிழ்ந்து, தன் அணிகலன்களைச் சாருதத்தனிடம் அடைக்கலமாக வைத்துவிட்டுத் தன் இல்லத்திற்குச் சென்றனள்.

அங்ஙனம் இல்லஞ் சென்றபின், வசந்தசேனை தன் காதலனையே எண்ணி எண்ணி ஏக்கங்கொண்டிருந்தாள். அவள் நீராடித் தெய்வங்களுக்குப் பூசையைச் செய்தற்கும் இயலாதவளானாள். அவள் தோழி **மதனிகை**யோடு இதைக் குறித்துப் பேசிக் கொண்டிருந்தாள்.

அந்நகரில் **சம்வாககன்** என்பவன் ஒருவன் இருந்தான். அவன் சூதில் தோற்றமையால் சூதாடுகளத் தலைவன் **மாதுர**னுக்குப் பத்துப் பொற்காசு தரவேண்டியிருந்தது. அதைக் கொடுக்க இயலாமையினால் அவன் தப்பியோடி, ஒரு பாழடைந்த கோயிலினுட் புகுந்து தெய்வவுருவங் கொண்டிருந்தனன். மாதுரனும் **சூதன்** என்பானும் அவனைத் தேடிக் கொண்டு அக்கோயிலினுட் புகுந்து, அவனைப் பிடித்துப் பொற்காசுகளைத் தரும்படி கேட்டனர். சம்வா-ககன் தன்னை விற்றுத் தருவதாகச் சொல்லி அவர்களுடன் போனான். அவன் அவ்வாறு போகும் பொழுது, **தருத்துரகன்** என்பவன் உதவியால் அவர்களிடமிருந்து மீண்டும் தப்பி, வசந்தசேனையின் இல்லத்தினுட் சென்று, அவளிடம் அடைக்கலம் புகுந்தான்.

"அம்மையே! என்னுடைய நகர் **பாடலி புத்திரம்**. புதிய நாடுகளைக் காணவேண்டும் என்னும் விருப்பத்தால், இந்நகரத்திற்கு வந்து சாருதத்தனிடம் தொழில் செய்து வாழ்ந்தேன்," என்று அவளிடம் கூறினன்.

அவன் சாருதத்தனுடைய அன்பிற்கு உரிய ஏவலாளன் என்றறிந்தவுடனே, அவனை அன்போடு

உபசரித்துத் தன் பொன் வளையலை மாதுரனுக்குக் கொடுத்து அவன் கடனைத் தீர்த்தாள். பிறகு அச் சம்வாககன் உலகப்பற்றைத் துறந்து பௌத்த சந்நியாசியாயினன்.

ஓரிரவு சாருதத்தன் ஓர் இசை யரங்கிற்குச் சென்று, நெடுநேரங் கழித்துத் தன் வீடு திரும்பினன். பின் அவனும், அவனுடைய தோழன் மைத்திரேயனும் அவ் விசையைப் பெரிதும் பாராட்டி மகிழ்ந்து உறங்கினர். அவர் உறங்கிய பின், **சருவிலகன்** என்பான் அவ் வீட்டில் சுவரைத் துளை செய்து உட்புகுந்தான். அவன் வசந்தசேனையின் பணிமகளாகிய மதனிகையிடம் அன்பு கொண்டிருந்தான். தனக்குப் பொருளின்மை அவ்வன்பிற்கு இடையூறாக இருக்கிறது என்று எண்ணினன். ஆகவே சாருதத்தன் இல்லத்தில் பொருள் கிடைக்குமென்றெண்ணி அங்குமிங்கும் தேடிக் கிடைக்காமையினல், பொருள், நிலத்தில் புதைத்து வைக்கப் பட்டுள்ளதோ என்றெண்ணிப் பலவிடங்களிலும் ஆராய்ந்தனன். அவ்வமயம் மைத்திரேயன் கனவு கண்டு, ''கன்னத் துளையையும் கள்வனையும் காண்கின்றேன். ஆதலால் இவ்வணிகல முடிப்பை நீங்கள் பெற்றுக் கொள்ளுங்கள்'' என்று பிதற்றினன். அந்த அணிகல முடிப்பு வசந்தசேனை சாருதத்தனிடம் அடைக்கலமாக வைத்ததாகும். சருவிலகன் மைத்திரேயனுடைய சொற்களைக் கேட்டு, அவன் வேண்டுகோளின்படியே அணிகல முடிப்பை அவனிடமிருந்து பெற்றுக்கொண்டு, வசந்தசேனையின் இல்லத்தை நோக்கிச் சென்றான்.

சருவிலகன் அடைக்கலப் பொருள்களைக் கவர்ந்து சென்றான் என்பதைச் சாருதத்தன் அறிந்து மனம் வருந்தினான். ஆனால் அவனுடைய மாண்பு மிக்க மனைவி தூதை, தன் கணவன் வறுமையால் வாடியிருந்தபோது அவனுக்குற்ற இத் துன்பத்தைக் கேட்டுப் பெரிதும் கவன்று, அவனுக்குப் பழியுண்டா காதிருத்தற் பொருட்டுத் தன் இரத்தின மாலையை மைத்திரேயனிடம் கொடுத்தனுப்பினாள். மைத்திரேயன் அவ்விரத்தின மாலையைச் சாருதத்தனிடம் காட்டிய போது அவன், "நண்ப! மைத்திரேய! அடைக்கலமாக வைக்கப்பட்ட அணிகலன்களைச் சூதில் தோற்றுவிட்டேன் என்று சொல்லி இவ்விரத்தின மாலையை அவற்றிற்கீடாக வசந்தசேனையிடம் கொடுப்பாயாக," என்று கூறியனுப்பினான்.

வசந்தசேனை ஓர் ஓவியப் பலகையில் சாருதத்தனது உருவத்தை வரைந்து, அதைப் பார்த்து இன்புற்றிருந்தாள். அவ்வமயம் ஒரு சேடி, "பெருமாட்டி! மன்னவன் மைத்துனன் சகாரர் உங்களை அழைத்துச் செல்வதற்காக ஒரு வண்டியை அனுப்பியுள்ளார். அவ்வண்டி வாயிலின்கண் உள்ளது. அவர் விலையுயர்ந்த அணிகலன்களையும் அனுப்பியுள்ளார். ஆகையால், செல்வாயாக. இது உம் அன்னையின் ஆணை," என்று கூறினள். வசந்தசேனை அதைக் கேட்டு மிக்க சீற்றங் கொண்டு, அன்னையின் ஆணை வழி நிற்க இசையாளாயினள்.

சருவிலகன் வசந்தசேனையின் இல்லினுட் சென்று ஒரு தனி இடத்தே மதனிகையைக் கண்டு களித்து, "மதனிகை! வசந்தசேனை உனக்குரிய

விலையாகப் பொருளைப் பெற்றுக் கொண்டு உன்னை விடுதலை செய்து விடுவாளோ? நான் சாருதத்தன் இல்லத்தில் களவு செய்து இந்த அணிகலன்களைக் கொண்டு வந்துள்ளேன்'' என்று கூறினன்.

மதனிகை, ''சருவிலக! இவை வசந்தசேனையின் அணிகலன்களாம். இவற்றை மீண்டும் சாருதத்தனிடம் சேர்ப்பித்தல் வேண்டும். அங்ஙனமின்றேல், அவருடைய தூதனுகச் சென்று, வசந்தசேனையிடம் இவற்றைக் கொடுப்பீராக. இப்படிச் செய்தால் எல்லாருக்கும் நன்மை புரிந்தவராவீர்,'' என்று அறிவுறுத்தினுள்.

இக் காதலர்களுடைய உரையாடலை மறைவாகக் கேட்டுக் கொண்டிருந்த வசந்தசேனை, மதனிகையின் மதி நலத்தைப் பாராட்டினுள். பின்பு சருவிலகன் வசந்தசேனையிடம் அணிகலன்களைக் கொடுத்தபோது அவள், ''ஐய! உமக்கு நான் மதனிகையைக் கொடுக்கிறேன். நீர் அவளை அழைத்துக் கொண்டு போகலாம்,'' என்று கூறி மதனிகையை அவனுடன் அனுப்பினுள்.

சருவிலகன் காதலியுடன் செல்லும்போது, வழியில் தன் நண்பனுகிய **ஆரியகனை, பாலகன்** என்ற மன்னன் சிறை செய்தான் என்று கேள்வியுற்றுன். ''ஆரியகன் அரசனுவான்'' என்று சித்தர் கூறவே, பாலகன் பயந்து அவனைச் சிறையிட்டான். எனவே, சருவிலகன் தன் காதலியை அவள் பெற்றேரிடம் கொண்டு போமாறு ஏவலாளிடம் கட்டளையிட்டு விட்டு, நண்பனைச் சிறையினின்றும் விடுவித்தற்கு விரைந்து சென்றுன்.

நிற்க, மைத்திரேயன் வசந்தசேனையிடம் சென்று,"அம்மையே! சாருதத்தன் தாங்கள் அடைக் கலமாக வைத்த அணிகலன்களைச் சூதாட்டத்தில் இழந்து விட்டார். அவற்றிற்கு ஈடாக இவ்விரத்தின மாலையைத் தாங்கள் பெற்றுக்கொள்ள வேண்டும்," என்று மொழிந்தனன். அவ்வாறே அவள் அவ்விரத் தின மாலையைப் பெற்றுக் கொண்டு அன்று மாலை யில் சாருதத்தனைக் காண்பதாகக் கூறினள்.

அன்று மாலை வசந்தசேனை தன் சேடியுடன் சாருதத்தன் இல்லத்திற்குச் சென்று, சருவிலகன் தந்த தன் அணிகலன்களை அவர்க்குக் காட்டினுள். அவளுடைய அணிகலன்களைக் கண்ட சாருதத்தன் மிக்க மகிழ்வெய்தினுன்.

மறுநாட் காலையில் சாருதத்தன் வசந்தசேனை யைப் **புட்பகரண்டகம்** என்னும் பூஞ்சோலைக்கு அழைத்து வருமாறு தன் ஏவலாளனுக்குக் கட்டளை யிட்டுத் தான் முன்னதாக அச்சோலைக்குச் சென்று அவள் வரவை எதிர்நோக்கி யிருந்தனன். வசந்த-சேனையும் அவனைக் காணும் வேட்கை மீதூரப் பெற் றிருந்தனள்.

மற்றும் அவள் சாருதத்தனிடமிருந்து பெற்ற இரத்தின மாலையைத் தன் சேடியிடம் கொடுத்து, "ஏடி! இம்மாலை பெருமாட்டி தூதையே அணிதற்கு உரியது. ஆகையால் இதை அப்பெருமாட்டியிடம் அளித்து விட்டு வருவாயாக" என்று கூறியனுப் பினள். ஆனுல் அம்மாலை சாருதத்தனுல் வசந்த-சேனைக்குப் பரிசிலாகத் தரப்பட்டதாகையால்,

தூதை அதை மீண்டும் வாங்கிக் கொள்ளுதற்கு இணங்கவில்லே.

இரதனிகை, சாருதத்தனுடைய புதல்வன் உரோகசேனனேச் சிறு தேருருட்டி விளையாடுதற்கு அழைத்தாள். ஆனல் அச்சிறுவன், "எனக்கு இம் மண்வண்டி வேண்டாம், பொன் வண்டிவேண்டும்," என்று வருத்தத்தோடு கூறியழுதனன். அவள் அவனே வசந்தசேனேயின் பக்கம் அழைத்துச் சென்றனள். வசந்தசேனே குழந்தையின் அழகையும் அழுகையையும் கண்டு உள்ளம் உருகியவளாய், "இக் குழந்தை யாவன்? ஏன் இவன் அழுகின்றுன்?" என்று வினவினள். இரதனிகை, "இக்குழந்தை சாருதத்தனின் புதல்வன்; இவன் பொன் வண்டி வேண்டுமென்று அழுகின்றுன்" என்றுரைத்தனள்.

வசந்தசேனே தன் அணிகலன்களேக் கழற்றி மண் வண்டியில் வைத்து, "என் அருமைச் செல்வனே! நீ இவ்வணிகலன்களே எடுத்துக்கொள். இவற்றைக் கொண்டு பொன் வண்டி செய்துகொள்" என்று ஆறுதல் கூறி அனுப்பினள்.

வசந்தசேனேயைப் புட்பகரண்டகம் என்னும் பூஞ்சோலேக்கு அழைத்துச் செல்வதற்காக ஏவலாளன் வண்டியைக் கொணர்ந்து வாயிலில் நிறுத்தினன். அவள் ஆடை அணிகலன்களே அணிந்து கொள்ளுதற்காகச் சிறிது நேரம் தாழ்த்துமாறு சேடியிடம் கூறினள். எனவே, ஏவலாளன் வண்டி விரிப்பைக் கொணர்தற்காக வண்டியை ஓட்டிக் கொண்டு வெளிச் சென்றுன். அவ்வமயம் சகாரனுடைய ஏவலாளனும், புட்பகரண்டகத்துக்குப்

போவதற்காக வண்டி யோட்டிக்கொண்டு அவ் வழியே வந்தனன். அங்குப் பல வண்டிகளின் போக்கு வரவால் தடை ஏற்படவே, அவ்வண்டியை அவன் வசந்தசேனையின் வீட்டு வாயிலருகே நிறுத்தினன். வசந்தசேனை தன் காதலனைக் கடிதிற் சென்று காண வேண்டுமென்ற அவாவினாலே சகாரன் வண்டியில் தவறாக ஏறி அமர்ந்தனள். ஏவலாளனும் அதையறி யாது வண்டியை ஓட்டிச் சென்றான்.

மன்னன் பாலகனால் சிறையிடப்பட்ட ஆரிய கன், சருவிலகனுடைய உதவியால் சிறையினின்றும் வெளியேறித் தப்பிச்சென்றான். அங்குமிங்கும் அலைந்த அவ்வாரியகன் அவ்வமயம் சாருதத்தனு டைய வண்டி வசந்தசேனையின் வீட்டு வாயிலருகே யிருப்பதைக் கண்டான். அது நகர்ப்புறத்தே செல் லும் வண்டி என்றறிந்து அதில் ஏறிக்கொண்டனன். அவ் வண்டிக்காரன் வசந்தசேனையே வண்டியில் ஏறி னாள் என்றெண்ணிப் புட்பகரண்டகம் என்னும் பூஞ் சோலைக்கு வண்டியை ஓட்டிச் சென்றான்.

அவ்வண்டி சென்ற வழியில் **வீரகன்** என்ற படைத் தலைவன், **சந்தனகன்** முதலிய படை வீரர் களோடு ஆரியகனைத் தேடிக் கொண்டிருந்தான். ஆகையால் அவன் அவ்வண்டியை நிறுத்தி, ''வண்டிக் கார! இவ்வண்டி எங்கே செல்லுகிறது? இது யாரு டையது? இதனுள் இருப்பவர் யார்?'' என்று வினவி னன். அவ்வண்டி சாருதத்தனுடையதென்றும், வசந்தசேனை அதில் ஏறிக் கொண்டு புட்பகரண்ட கம் போகின்றாள் என்றும் வண்டிக்காரன் கூறினன்,

சந்தனகன் அவ்வண்டியைச் சோதித்த போது, ஆரிய கன் ஆண்டுள்ளான் என்றறிந்தனன். ஆயினும் அவன் ஆரியகன் வேண்டுகோளின்படியே அவனுக்கு அபயமளித்தான். ஆகையால் வசந்தசேனையே வண்டியிலிருந்தாள் என்று வீரகனிடத்தில் விளம்பி னன். ஆனால், அவ் வீரகன், சந்தனகன், மீது ஐயம் கொண்டான். இதையறிந்த சந்தனகன்,வீண் கலகம் ஒன்றை விளைத்துப் படைத் தலைவனை நன்கு புடைத் தான். ஆகவே வீரகன், சந்தனகன் மீது வழக்குத் தொடர நீதிமன்றம் நோக்கி விரைந்து சென்றனன். சந்தனகனும் ஆரியகனிடத்தில் மறைவாகத் தன் வாளினைக் கொடுத்துவிட்டுச் சென்றான். வண்டியும் விரைந்து புட்பகரண்டகம் சென்றது.

புட்பகரண்டகத்தில் சாருதத்தன் வசந்தசேனை யின் வரவை எதிர்நோக்கியிருந்தார். ஆனால் அவர் வண்டி வந்தபோது வசந்தசேனையைக் காணாது ஆரிய கனையே கண்டு ஆச்சரியம் கொண்டார். ஆரியகன் சாருதத்தனிடம் அடைக்கலம் புகுந்தான். ஆகவே அவனுடைய விலங்குகளைக் கழற்றுவித்து அவ்வண்டி யிலேயே தப்பிச் செல்லுமாறு அவனை அனுப்பி விட்டுச் சாருதத்தன் தன் வீடு நோக்கிச் சென்றார்.

நிற்க, சம்வாககன் என்ற பௌத்த சமயத்துறவி அப்புட்பகரண்டகத்தின் ஒருபாலுள்ள புட்கரணி யில் தம் ஆடையைத் தூய்மை செய்து கொண்டிருந் தார். அதைக் கண்ணுற்ற சகாரன் அவரை நையப் புடைத்து வெளியே அனுப்பி விட்டான்.

பின் சகாரன் தன் தோழனுடன் அச்சோலையின் அழகைக் கண்டு களித்திருக்கும்போது, **தாவரகன்** என்ற ஏவலாளன் வண்டியை ஓட்டிக் கொண்டு அங்கு வந்தான். அவ்வண்டியில் வந்த வசந்தசேனை யைச் சகாரன் தன்னிடம் அன்பு காட்டுமாறு பன் முறை வற்புறுத்தியும் அவள் இணங்காமையினுல், அவள் கழுத்தைக் கையால் நெறித்தான். அப் பொழுது அவள் உயிர்ப்பற்று நிலத்தில் வீழ்ந்தாள். அதைக் கண்ட அவன் நண்பனும் தாவரகனும் வருந்தினர். தோழன் அக் கொலைக் குற்றம் தன்மீது சுமத்தப்படும் என அஞ்சி, அவ்விடத்தினின்றும் நீங்கி வெளியே சென்ருன். சகாரன், உயிர்ப்பற்றி ருந்த வசந்தசேனையின் உடலைச் சருகுகளால் மூடி விட்டுத் தாவரகன் தன்னுடைய குற்றத்தை வெளி யிடுவானே எண்றெண்ணி, அவனைத் தன் வீட்டு மேன்மாளிகையில் விலங்கிட்டு வைத்து வெளியே சென்ருன்.

சிறிது நேரத்துக்குப்பின் சம்வாககன் என்ற பௌத்த சமயத்துறவி மீண்டும் அச்சோலையினுட் புகுந்து, வசந்தசேனை சருகுகளின் அடியில் இருந் ததைத் தற்செயலாகக் கண்டு, நீர் கொடுத்து, அவள் களைப்பைப் போக்கி உண்மை உணர்ந்தார். பின்னர் அவளை அருகிலிருந்த பௌத்த மடத்திற்குக் கொண்டு சென்று, தரும சகோதரியின் ஆதரவில் வைத்தார்.

இஃது இவ்வாருக, சகாரன் நீதிமன்றம் சென்று, நீதிபதியிடம் சாருதத்தன் புட்பகரண்டகம் என்னும் சோலையில், வசந்சேனையை அவளுடைய அணிகலன்களைக் கவர்வதற்காகக் கொன்றுவிட் டான் என்று வழக்குரைத்தான். நீதிபதி வசந்த-

சேனையின் தாயையும், சாருதத்தனையும் நீதிமன்றத்திற் கழைத்து விசாரித்தார். அவ்விசாரணை நடக்கும் பொழுது படைத் தலைவனாகிய வீரகன் அங்குற்று, "ஐய! யாம் ஆரியகனைத் தேடும்பொழுது வழியில் ஒரு வண்டி வந்தது. அது சாருதத்தனுடையது. அவ் வண்டிக்காரன் வசந்தசேனையை அதில் ஏற்றிக் கொண்டு புட்பகரண்டகத்திற்குச் சாருதத்தன்பால் அழைத்துப் போவதாகக் கூறினான். அவ் வண்டியை முதலில் சந்தனகன் சோதித்தான். பின்னர் யானும் அதைச் சோதிக்க வேண்டுமென்று சொல்லிய பொழுது அச்சந்தனகன் என்னைக் காலால் உதைத்தான். இதைத் தாங்கள் விசாரித்து நீதியளிக்க வேண்டும்" என்று கூறினான். இவ்வீரகன் கூற்றால் வசந்தசேனையும் சாருதத்தனும் புட்பகரண்டகம் சென்றது உண்மை என்று தோன்றியது.

நீதிபதி, அவ்வீரகனைப் புட்பகரண்டகம் சென்று அவ்விடத்தில் இறந்த ஒரு பெண்ணின் உடல் இருக்கின்றதா என்று பார்த்து வரச்சொன்னார். அவன் அவ்வாறே சென்று பார்த்து வந்து, ஆங்கு ஓர் இறந்த பெண்ணின் உடல் இருப்பதாகக் கூறினான். அவ்வுடல் மரம் வீழ்ந்திருந்த மற்றோர் பெண்ணின் உடலேயாயினும், நீதிபதி அது வசந்த-சேனையின் உடல்தானோ என்றெண்ண இடமிருந்தது.

சாருதத்தன் நீதிமன்றத்திற் கழைக்கப்பட்டுள்ளார் என்ற செய்தியறிந்த மைத்திரேயன், அவரைக் காண்பதற்காக நீதி மன்றத்திற்கு வந்தான். வசந்தசேனை சாருதத்தனுடைய புதல்வன் உரோகசேனனுக்குப் பொன் வண்டி செய்வதற்

காகக் கொடுத்த அணிகலன்களை, மீண்டும் அவளி டமே கொடுத்து விடும்படி முன்பு மைத்திரேய னிடம் அவ்வணிகலன்களைச் சாருதத்தன் அனுப்பி யிருந்தார். மைத்திரேயன் சகாரனுடன் வாதிட்டு ஒருவரை யொருவர் அடித்துக் கொண்டனர். அப் பொழுது மைத்திரேயன் கையிலிருந்த அணிகலன் கள் கீழே விழுந்தன. சகாரன் அவ்வணிகலன்களைக் கண்டு அவையே அவ் வசந்தசேனையின் ஆபரணங்க ளென்றும், அவற்றிற்காகத்தான் சாருதத்தன் அவ ளைக் கொன்ருன் என்றும் கூறினுன். சாருதத்தனு டைய அரும்பெருங் குணங்களைப்பற்றி நீதிபதி ஐயமற அறிந்திருந்தும், மேற்கண்ட சான்றுகளால் சாருதத்தன் குற்றவாளியே என்று தீர்ப்பளித்தார். ஆகவே அரசன் பாலகன், சாருதத்தனைக் கழுவி லேற்றிக் கொன்று விடுமாறு கட்டளையிட்டான்.

கொலைத் தண்டனையை நிறைவேற்றுவதற் காகக் கொலையாளர்கள் சாருதத்தனைக் கொலைக் களத்திற்கு அழைத்துச் சென்ருர்கள். அவ்வாறு செல்லுங்கால், சாருதத்தன் தன்னுடைய புதல்வனை யும், மைத்திரேயனையும் கண்டு வருந்திச் சென்ருன். பறைசாற்று மிடங்களிலெல்லாம் "சாருதத்தன் இழிந்த பொருள் காரணமாக வசந்தசேனை யென் னும் கணிகையைக் கொன்ருன். ஆதலால் அரசர் பாலகன் அவனைக் கொல்லக் கட்டளையிட்டுள்ளார்," என்று பறையறைவிப்போர் பறைசாற்றி, அவன் குற்றத்தைக் கூறினுர்கள்.

சகாரன் வீட்டு மேனிலத்தில் விலங்கிடப்பட்டுக் கிடந்த தாவரகன் என்னும் ஏவலாளன், பறையறை

விப்போர் சாற்றியதைக் கேட்டுச் சாருதத்தனைக் காப்பதற்காகச் சாளரத்தின் வழியாக நிலத்தில் வீழ்ந்தான். அப்பொழுது அவன் விலங்கு முறிந்த தால் அவன் எழுந்து கொலையாளிகளை நெருங்கி, "சாருதத்தன் குற்றமற்றவர்; சகாரனே வசந்த-சேனையைக் கொன்றான்" என்று கூறினன். எனினும் கொலைஞர்கள் அதை ஏற்றுக் கொள்ளாமல், சாரு தத்தனைக் கொலைக்களத்திற்கு அழைத்துச் சென்ற னர்.

அவ்வமயம் சம்வாககன் என்னும் துறவி பௌத்த மடத்தினின்றும் வசந்தசேனையைச் சாருதத்தன் இல்லத்திற்கு அழைத்துக் கொண்டு போனார். அவ்வாறு அவ்விருவரும் போகும் வழியில் சாருதத்தனுக்கு நேர்ந்த இடையூற்றை அறிந்து, கொலைக்களம் சென்று உண்மை நிகழ்ச்சிகளைக் கூறி சாருதத்தன் கழுவேற்றப்படுதலைத் தடுத்தனர். சாருதத்தன் தன் காதலியைக் கண்டு உள்ளம் குளிர்ந்து உவகை பூத்தான்.

இதற்கிடையே, ஆரியகன் பாலகனைக் கொன்று அரசியலைக் கைப்பற்றினான். அப்பொழுதே அவன் சாருதத்தனையும் விடுதலையடையச் செய்து, **குசாவதி** என்னும் தலை நகரிலிருந்து அரசு புரியும் வண்ணம் அரசியலை அவனுக்களித்தான்.

சாருதத்தன் விருப்பப்படியே சகாரன் யாதொரு தீங்குமின்றிக் காப்பாற்றப்பட்டான். சாருதத்தன், தீப்பாயும் தருவாயிலிருந்த தன் மனைவி தூதையைக் கண்டு அவள் துயரைப் போக்கினார். பிறகு தமது இரு கண்மணி போன்ற மனைவியரோடும், புதல்வனோடும் இன்ப வாழ்க்கையெய்தி யிருந்தனர்.

---

## 3. உதயணன்

பண்டை நாளில், வளமாந்த **வத்தவ** நாட்டைச் **சதானிகன்** என்னும் மன்னன் **கௌசாம்பி**யைத் தலை நகராகக் கொண்டு ஆண்டு வந்தான். அவன் தன் அண்டை நாடாகிய **சேதி** நாட்டின் மன்னன் **சேடக னு**டைய அழகிய மகள் **மிருகாபதி**யை விரும்பி மணந் தனன். சேடகன் தான் முதுமைப் பருவம் உற்றதை உன்னி ஆட்சியைத் தன் கடைசி புதல்வன் **விக்கிர மனி**டம் ஒப்புவித்துவிட்டு, **விபுலமலைச்** சாரலை அடைந்து, அங்குள்ள ஒரு முனிவருடன் தவஞ் செய்யத் தொடங்கினன்.

சில காலத்திற்குப்பின் மிருகாபதி கருவுற்றாள். ஓர் இரவு அவள், மேல் மாடியில் நிலா முற்றத்தில் உறங்கும்போது, அவ்வழியே வந்த சரபப் பறவை ஒன்று, சிறந்த ஆடையுடுத்தியிருந்த மிருகாபதியை இறைச்சிக் குவியல் என்று கருதி, விபுலமலைக்கு எடுத்துச் சென்றது. அம்மலைச் சாரலை அடைந்த போது அப்பறவை தான் எடுத்து வந்தது பெண் என்று உணர்ந்து அவளைவிட்டுச் சென்றது. மிருகா பதி அப்போது நிறை கர்ப்பிணியாதலால், அம்மலைச் சாரலிலேயே, அருணோதயத்தின்போது ஓர் ஆண் மகவை ஈன்றாள்.

அப்போது அங்குத் தவம் செய்யும் சேடகன் அவ்வழியே வந்து கொண்டிருந்தான். குழந்தை அழும் குரலைக்கேட்டு அத்திசை நோக்கிச் சென்ற போது, அங்குத் தன் மகள் மிருகாபதியும், அவள் குழந்தையும் இருக்கக் கண்டான். மிருகாபதியும்

தன் தந்தையைக் கண்டு அச்சம் நீங்கினள். பின்பு அவர்கள் தவப் பள்ளிக்குச் சென்றனர். அக்குழந்தை, பகலவன் உதித்த காலத்தில் பிறந்தமையால் அதற்கு **உதயணன்** எனப் பெயரிட்டனர். அங்குப் பிரமசுந்தர முனிவர் தம் மனைவி **பரமசுந்தரியுடனும்**, மகன் யூகியுடனும் வாழ்ந்து வந்தனர். உதயணனும் யூகியும் ஒன்றாக வளர்ந்து, கல்வி கேள்விகளிலும், அரசர்க்குரிய படைக்கலப் பயிற்சியிலும் தேர்ச்சியுற்று, ஆருயிர் நண்பர்களாக வளர்ந்தனர். பிரமசுந்தர முனிவர் உதயணன்பால் அன்புகூர்ந்து, யானையை அடக்கியாளும் ஒரு மந்திரத்தையும், **கோடபதி** என்னும் யாழையும் அவனுக்கு அளித்தார்.

காட்டில் ஒரு நாள் உதயணன் கோடபதியைக் கையிற்கொண்டு உலாவிக் கொண்டிருக்கையில், ஒரு யானைக் கூட்டத்தைக் கண்டான். உடனே அவன், முனிவர் அருளிய மந்திரத்தைத் தியானித்து யாழை மீட்டி வாசித்தனன். அவ்விசையைக் கேட்ட அந்த யானைக் கூட்டத்தினிடையே நின்ற தெய்வயானை, உதயணன் அருகில் வந்து அவன் ஏவலுக்குக் காத்து நின்றது. உதயணன் மிக மகிழ்ந்து அதன் மீதேறித் தவப் பள்ளிக்குத் திரும்பினன். தெய்வயானை உதயணனுடனே இருந்து வந்தது. அது ஒரு நாள் அவன் கனவில் தோன்றித் தன்மீது பாகரை ஏற்றினாலும், தோற் கயிற்றால் தன்னைப் பிணித்தாலும், தனக்கு முன் உணவருந்தினாலும் அவனை விட்டு நீங்கி விடும் என்று கூறியது. உதயணனும் யானையின் பெருமையை மதித்து அதன் கருத்துப்படியே நடந்து வந்தான்.

உதயணன் இவ்வாறு விபுலமலேச்சாரலில் வாழ்ந்திருக்கையில், சேதி நாட்டை ஆண்டு வந்த விக்கிரமன் தன் தந்தை சேடகனிடம் வந்து, தான் துறவறம் மேற்கொள்ள விரும்பியும் ஆட்சியை ஏற்கத்தக்கவர் இல்லேயே என்று கூறி வருந்தினன். அவன் சேடகனுடன் இருந்த உதயணனே இன்னுன் என்று அறிந்து, அவனேச் சேதி நாட்டு அரசனுக்கச் சேடகனிடமும் மிருகாபதியிடமும் உடன்பாடு வேண்டினன். அவர்கள் இசையவே, உதயணனே **வைசாலி**க்கு அழைத்துச் சென்று, சேதி நாட்டு மன்னனுக முடி சூட்டினுன். உதயணன் தன் நண்பர்கள் **யூகி, உருமண்ணுவா, வயந்தகன், இடவகன்** ஆகியோருடைய துணேயைக் கொண்டு சேதி நாட்டை ஆண்டு வந்தான்.

உதயணன் அரசனுனபின், சதானிகன் ஒரு முனிவர் மூலம் மிருகாபதிக்கு நேர்ந்தவை யாவற்றையும் அறிந்து, வைசாலிக்குச் சென்று மனேவியையும் மகனேயும் கண்டு, மிருகாபதியைக் கௌசாம்பிக்கு அழைத்துப் போனுன். அன்றியும் சில ஆண்டுகட்குப் பின் சதானிகன் ஆட்சியில் வெறுப்புற்று, உதயணனேயே வத்தவ நாட்டிற்கும் மன்னவன் ஆக்கி விட்டான். உதயணன் சேதி நாட்டு ஆட்சியை யூகியிடம் ஒப்படைத்துவிட்டு, வத்தவ நாட்டை யாவரும் போற்றும் வண்ணம் ஆண்டு வந்தான். ஒரு நாள் அவன் நாட்டியக்காரி ஒருத்தியின் ஆடலேக் கண்டு, தெய்வயானேக்கு உணவளிக்க மறந்து, பசி மிகுதியால் தான் உண்டான். இதையறிந்த தெய்வயானே தான் முன் கூறியவண்ணம் உதயணனே

விட்டு அகன்றது. தெய்வயானை மறைந்ததை அறிந்த மன்னன் அதைக்காணப் பலவாறு முயன்றான். பல் வகை முயற்சியும் பலனளிக்காமற் போகவே, தானே கோடபதி யாழை எடுத்துக்கொண்டு எங்கும் தேட முற்பட்டான்.

உதயணன் தெய்வயானையைத் தேடிக்கொண்டு இருக்கையில், **அவந்திநாட்டு** மன்னனாகிய **பிரச் சோதனன்** வத்தவ நாடும், சேதி நாடும் தனக்குத் திறை செலுத்தாததை யறிந்து அந்நாட்டு மன்னர்களான உதயணனையும், யூகியையும் கைது செய்ய எண்ணினான். பிரச்சோதனன் **உச்சியினியைத்** தலை நகராகக் கொண்டு மிக்க சிறப்பொடு அரசர்க்கரசனாக விளங்கினான். அவனுக்குப் **பதுமைக்காரிகை** என்ற நற்குண மனைவியும், **வாசவதத்தை** என்ற அழகிய மகளும் இருந்தனர். பிரச்சோதனன் உதயணனையும் யூகியையும் கைப்பற்ற விழைந்தபோது, அவனுடைய அமைச்சன் **சாலங்காயன்**, அவர்களை வஞ்சனையால் பிணிக்க ஒரு வழி கூறினான். பிரச்சோதனன் தனியே சேதி நாட்டின் மேல் படைகளை ஏவினால், தெய்வயானையைத் தேடிக் கொண்டிருக்கும் உதயணன் யூகிக்கு உதவி செய்ய முடியாது என்றும், காட்டில் ஒரு மாய யானையை அனுப்பி உதயணனைச் சிறைப்படுத்தி விடலாம் என்றும் சாலங்காயன் சாற்றினன். இவ்வாறு சாலங்காயன் கூறியதற்கு உடன்பட்டுப் பிரச்சோதனன் சேதி நாட்டின் மீது படைகளை ஏவினான். அப்படைகள் யூகியுடன் போர் புரிந்து கொண்டிருக்கையில், சிற்பிகள் ஒரு யந்திர யானையைச் செய்தனர். அந்த யந்திர யானை வீரர்

கள் படைக்கலங்களோடு மறைந்திருக்கத் தக்கதாக இருந்தது. பிரச்சோதனன் சொற்படி சாலங்காயன் படைகளுடன் அந்த யந்திர யானையைப் பின்பற்றிக் காட்டிற்குள் சென்முன்.

காட்டிற்குள் நுழைந்த அப்போலி யானை உண்மை யானை போன்று பல பிடிகளுடன் பிளிறிக் கொண்டு சென்றது. இதைக் கண்ட சிலர் இது உதயணனுடைய தெய்வயானையே என்றெண்ணி, அவனிடம் சென்று தெரிவித்தனர். உதயணனும் மகிழ்ந்து அங்கு வந்து யாழ் வாசிக்கவே, யந்திர யானையும் அவனருகில் வந்து இசைக்கு உருகுவது போல் நின்றது. உதயணனும், இது தன் யானையே என்று எண்ணி விம்மிதமுற்று நின்முன். உடனே யானையின் உள்ளிருந்து பிரச்சோதனனுடைய வீரர்கள் வெளிப்போந்து உதயணனைச் சூழ்ந்து கொண்டனர். உதயணனுடன் வந்த வயந்தகன் அவ்வீரர்களோடு பொருது அவர்களைக் கொன்முன். இதையறிந்து அதுவரை ஒளிந்திருந்த சாலங்காயன், படைகளுடன் வந்து அவர்களைத் தாக்கினுன். உதயணன் வியக்கத்தக்க வீரத்துடன் தாக்கும்போது, அவனுடைய வாள் ஒரு யானைக் கோட்டில் பட்டு ஒடிந்து விழவே செயலற்று நின்முன். உடனே சாலங்காயன் அவனை வளைத்துக்கொண்டு சிறைப்படுத்தினுன். பிறகு அவன் பிரச்சோதனனிடம் கொண்டு செல்லப் பட்டுச் சிறையிலடைக்கப் பட்டான்.

உதயணன் பிரச்சோதனனுல் சிறைப்படுத்தப் பட்டதை வயந்தகன் மூலம் அறிந்த யூகி மிகுந்த கோபங்கொண்டு, உச்சியினியை அழிக்கவும், வாச-

வதத்தையை அவள் தந்தை பிரச்சோதனன் அறியா மல் உதயணனுக்கு மண முடிக்கவும் உறுதிகொண்டு சூளுரைத்தான்.

பின்னர் உதயணனை மீட்க வழிதேடிச் சூது மார்க்கமே சிறந்ததெனக் கொண்டான். தன் நண் பர்களைச் சேதி நாட்டையும், வத்தவ நாட்டையும் காக்கும்படி அமைத்துவிட்டுத் தான் இறந்து விட்ட தாகச் செய்தி பரப்பும்படி யூகி ஏற்பாடு செய்தான். ஒற்றர்கள் இச்செய்தியைப் பரப்பவே, யூகி தன் நண்பர்களுடன் மாறுவேடம் பூண்டு உச்சியினியின் அருகே வந்து தங்கினன்.

யூகியின் நண்பர்கள் பல்வேறு வேடங்கொண்டு பிரச்சோதனன் அரண்மனையில் வேலைக்கமர்ந்து, அங்கு நடப்பனவற்றை அவ்வப்போது யூகிக்கும் அறி வித்து வந்தனர். யூகியும் கரகம் ஆடுவோனைப் போன்று வேடமணிந்து பாடிக்கொண்டு உச்சியினி யின் தெருக்களில் சுற்றி, உதயணன் சிறையிடப்பட் டுள்ள இடத்திற்குச்சென்று அவனைக் கண்டான்; உதயணனும் யூகியைக் கண்டு மகிழ்ந்தான்.

யூகி அடிக்கடி உதயணன் சிறைப்பக்கம் சென்று வருவதைக் கண்ட சிறைக்காவலன் ஒருவன் ஐயுற்று, மன்னன் பிரச்சோதனனிடம் அறிவித்தான். மன்னன் சாலங்காயனைக் கேட்கவே, "யூகிக்கு மார் பில் யானைக்கோடு குத்திய அடையாளம் ஒன்று இருக்கும். அப்படி அவனுக்கு இருந்தால் அவனை வஞ் சித்துச் சிறைப்படுத்தலாம்," என்று அமைச்சன் கூறி னன். இதை ஒரு நண்பன் மூலம் அறிந்த யூகி தன் மார்பைத் துணியால் மறைத்துக் கொண்டு உச்சி யினியில் நடமாடிக் கொண்டிருந்தான்.

யூகி உதயணனைச் சிறை மீட்க ஒரு யுக்தி செய்தான். ஒரு நாள் இரவு உச்சியினி நகரத்தில் பட்டத்து யானை **நளகிரி** இருக்கும் இடத்திற்கு யூகி சென்று, அது மதங்கொள்ளுமாறு அதற்கு மருந்திட்டு வெறியுண்டாக்கினன். அன்றிரவே நளகிரி மதவெறி கொண்டு, கட்டுத் தறியை முறித்துக் கொண்டு, பாகருக்கும் அடங்காமல் தெருக்களில் ஓடிற்று. எதிர்ப்பட்ட மக்களைச் சொல்லொணுத் தொல்லைப்படுத்தியது. இவ்வாறு நளகிரி நகரை அழித்துக்கொண்டிருக்கவே, மன்னன் பிரச்சோதனன் செய்வதறியாது திகைத்தான். சாலங்காயன், "உதயணன் யானையை அடக்கும் வன்மை படைத்தவன்," எனக் கூறினன். உடனே **சிவேதன்** என்னும் அமைச்சன் உதயணனிடம் சென்று நளகிரியின் மதத்தை அடக்குமாறு வேண்டினன். இவ்வுதவிக்காகப் பிரச்சோதனன் உதயணனை மறுபடியும் கௌசாம்பிக்கு ஆட்சி செலுத்த அனுப்புவதாகவும் தெரிவித்தான். உதயணனும் இதற்கு உடன்பட்டு, நளகிரி இருக்கும் இடத்தை யறிந்து, யானையை அடக்கும் மந்திரத்தைச் சொல்லி யாழை மீட்டினன். உடனே நளகிரி மதம் நீங்கி அமைதியுடன் உதயணனை வணங்கியது. மக்களும் பிரச்சோதனனும் மிகவும் மகிழ்ந்தனர். பிரச்சோதனன் உதயணன் மன்னிப்பைக் கோரித் தன்னுேடு சில நாட்கள் தங்கியிருக்கும்படி அவனை வேண்டினன்.

உதயணன் ஒரு நாள் அரசனுடன் அளவளாவிக் கொண்டிருக்கும்போது, அவன் மகள் வாசவதத்தையைப் பார்த்து அவளது அழகால் ஈர்க்கப்பட்டான். பின்னர் அரசனிடமிருந்து பிரிந்து தான் தங்கியிருக்

கும் இடத்திற்கு வந்ததும், வாசவதத்தையின் நினைவாகவே யிருந்தான். வாசவதத்தையும் உதயணன்பால் அன்பு கொண்டிருந்தனள்.

பின்னர் பிரச்சோதனன் உதயணனுடைய கலைத்திறனைக் கண்டு வியப்புற்று, அவனைத் தன் புதல்வர்களுக்குப் படைக்கலப் பயிற்சியும், வாசவதத்தைக்கு வீணைப் பயிற்சியும் அளிக்குமாறு வேண்டினான். உதயணனும் அவ்வேண்டுகோளுக்குடன் பட்டு அவ்வாறே செய்தனன். வாசவதத்தையும் உதயணனும் நாள் தோறும் பழகி வந்ததால் அவர்கள் அன்பும் வளர்ந்தது. வாசவதத்தையின் அழகினையும், கலை நலத்தையும் அறிந்த மன்னர் பலர் அவளை மணக்க விழைந்தனர். வாசவதத்தை அச்செய்திகளை அறிந்து, தன் மன நிலையைச் செவிலித் தாயாகிய **சாங்கியத் தாய்** என்பவளிடம் கூறினாள். அவளும் வாசவதத்தையை உதயணனுக்கு மணமுடிக்க ஏற்பாடு செய்வதாக வாக்குறுதி கூறினாள். உதயணனிடம் சென்று வாசவதத்தையின் உள்ளக் கருத்தைத் தெரிவித்து, அவளை மணமுடிப்பதற்கு வேண்டிய ஏற்பாடு செய்யுமாறு அவனைத் தூண்டினாள்.

பிரச்சோதனனுடைய புதல்வரும், வாசவதத்தையும் தங்கள் கலைகளை முற்றும் கற்றுத் தேர்ச்சி பெறவே, பிரச்சோதனன் அவற்றை அரங்கேற்றம் செய்தான். அவனுடைய புதல்வரும் தாம் கற்ற கலைகளைத் திறம் படச் செய்து காட்டினர். வாசவதத்தையும் தன் வீணைப் பயிற்சியை அனைவரும் ஆச்சரியமுறும்படி வெளிப்படுத்தினாள். இவற்றைக் கண்டோர் உதயணனைப் பெரிதும் பாராட்டினர். பிரச்-

சோதனன் உதயணன்பால் நன்றியுடையவனாய் அவனுக்கு உடனே கௌசாம்பியின் ஆட்சியைத் தர வேண்டும் என்று முடிவு செய்தான். ஆகையால் அதைக் கைப்பற்றியிருந்த ஆருணியின்மேல் போர் தொடுக்குமாறு படைகளுக்குக் கட்டளையிட்டான்.

இதையறிந்த யூகி, உதயணன் நகரைவிட்டு நீங்காதிருக்க ஒரு சூழ்ச்சி செய்தனன். அவன் ஒரு குறி சொல்லும் மகளை அனுப்பி, உச்சியினி மக்கள் நீர் விழா நடத்துமாறு தூண்டச் செய்தான். அக் குறி சொல்லுபவள் தெய்வக் குற்றம் நேர்ந்ததென அறிவிக்க, மன்னன் நீர் விழாவிற்கு ஏற்பாடுகளைச் செய்யுமாறு கட்டளையிட்டான்.

நீர் விழா மிகுந்த கோலாகலத்துடன் ஆரம்பிக்கப்பட்டது. நகரத்து இளைஞரும், மகளிரும், மன்னனும், மன்னனைச் சார்ந்தோரும் இவ்விழாவில் பங்கெடுத்துக் கொண்டார்கள். வாசவதத்தையும் தன் தந்தையுடன் நீராடலில் கலந்து கொள்ள வந்தாள். உதயணனும் பிரச்சோதனனின் அழைப்பிற்கிணங்கிப் **பத்திராபதி** என்னும் யானை மீதேறி ஆற்றங்கறைக்கு வந்தான். மக்கள் நீராட்லில் மனம் களித்துக்கொண்டிருக்கும்போது யூகியினிடமிருந்து வந்த வயந்தகன் உதயணனிடம், "வாசவ-தத்தையைக் கடத்திச் செல்ல இதுவே நல்ல வாய்ப்பாகும். இந்நகரில் மறைந்திருக்கும் கள்ளர், நகரைத் தீக்கிரையாக்கியவுடன், தாங்கள் வாசவ-தத்தையுடன் நகரைவிட்டு நீங்கவேண்டும். நீங்கள் பயமின்றி இத் தீரச் செயலைச் செய்யவும்," என்று கூறினன். இதைக் கேட்ட உதயணன் மிக

மகிழ்ந்து வாசவதத்தை நீராடும் துறைக்குப் பத்தி-ராபதி மீது சென்றான்.

அப்போது காற்றும் மழையும் தொடங்கவே, இதுவே தக்க சமயமென யூகி முரசறைந்துத் தன் வீரர்களுக்குத் தெரிவிக்க, வீரர்கள் பிரச்சோதனன் ஆட்களோடு பொருதனர். இதன் நடுவில் மறைந் திருந்த கள்ளரும் வெளியேறி நகர் முழுவதும் தீயிட்டனர். நீராடும் மக்கள் இதைக் கண்டு மிக வும் குழப்பமடைந்தனர். மன்னன் பிரச்சோதனன் செய்வதறியாது வாசவதத்தையைக் காப்பாற்றும் பொறுப்பை அவளுடைய ஆசிரியனாகிய உதயண-னிடம் ஒப்படைத்தான். உதயணன் இதுவே தக்க சமயமெனக் கருதி, வாசவதத்தையை அவளுடைய தோழி **காஞ்சனமாலையுடன்** யானை மீதேற்றிக் கொண்டு கௌசாம்பியை நோக்கிச் சென்றான். வழியில் உதயணன் யூகியைச் சந்தித்து, வாசவ-தத்தையின் செவிலித் தாயாகிய சாங்கியத் தாயை யும் தான் வரும்போது அழைத்து வரும்படிக் கூறினான். யூகியும் உடன்படவே, உதயணன் பத்திராபதியை விரைந்து நடத்தினான். இவ்வாறு உதயணன் வாசவதத்தையுடன் வெளியேறியதை யறிந்த வீரர்கள், மன்னன் பிரச்சோதனனிடம் தெரிவிக்கவே, அவன் மிகுந்த கோபமுற்றுப் படை களைப் போருக்கு எழும்படிக் கட்டளையிட்டான்.

காட்டு வழியில் சென்ற உதயணன், வாசவ-தத்தை தன் பெற்றோரை விட்டு நீங்கியதற்காக வருந்தாதிருக்கும்படி பலவாறு தேற்றினான். இவ் வாறு உதயணன் பத்திராபதியின்மீது ஏறிப் பல காத

தூரம் காட்டு வழிகளைக் கடந்து, பிரச்சோதனன் நாட்டெல்லையை வந்தடைந்தவுடன், பத்திராபதி மிகவும் களைப்புற்றுக் காலவேகம் என்ற நோய் வாய்ப்பட்டு இறந்துவிட்டது. வழியில் உதயண-னுடைய கோடபதி என்னும் யாழும் ஒரு மூங்கில் மரத்தில் சிக்கிக்கொண்டது. வயந்தகனும் உதயண-னிடம் வந்து சேரவே, அவன் துணை கொண்டு பத்திராபதியை அடக்கம் செய்துவிட்டு, வாசவதத்-தையையும், அவள் தோழியையும் கால் நடையாகவே கானிடை அழைத்துச் சென்றான். கால் நடையால் ஏற்பட்ட சோர்வைப் போக்க வழியில் இருந்த மரங்கள் செறிந்த சோலையொன்றில் தங்கி இளைப்பாறினர்.

வயந்தகன், ''ஐய! வாசவதத்தையையும், தோழி காஞ்சனமாலையையும் நீர் பாதுகாத்துக் கொள்ளும். நான் இடவகன் இருக்கும் புட்பக நகருக்குச் சென்று மிகுந்த படையுடன் விடியற்காலையில் வருகிறேன்,'' என்று உதயணனிடம் கூறிச் சென்றான்.

உதயணன் சோலையைக் காவல் புரிந்து கொண்டிருக்கையில் ஆறலை கள்வர் அங்குற்று அவனைத் தாக்கினர். உதயணன் தனியனாக அவர்களை எதிர்க்க முடியாமல் திகைத்தான். அக்கள்வர் உத-யணனைச் சூழ்ந்துகொண்டு, ''நீ யார்?'' என்று கேட்டனர். உதயணன் ''நான் ஒரு வணிகன். பிரச்-சோதனன் நாட்டிலிருந்து பெரும் பொருள் கொண்டு வந்தேன். அப் பொருளனைத்தையும் ஓரிடத்தில் புதைத்து வைத்திருக்கிறேன், வேண்டு

மாயின் உங்களுக்கு அதைத் தருகிறேன்,'' என்று கூறினன். உடனே அக்கள்வர் உதயணனைத் துணியால் கட்டிப் பிடித்துக் கொண்டு புதையலைக் காட்டாவிடின் கொன்று விடுவதாக அச்சுறுத்தினர். அச்சமயத்தில் புட்பக நகரினின்றும் படையுடன் வயந்தகன் உதயணனைக் கள்வர் நடுவில் கண்டு அவர்களை அடித்துத் துரத்தினன்.

தக்க சமயத்தில் வந்து தனக்குதவிய நண்பர்களை உதயணன் பாராட்டினன். பின்பு அவன், நண்பர்களுடன் **சயந்தியம்** என்னும் பெரு நகருக்குச் சென்ருன். அந்நகர மக்கள் மகிழ்வோடு அவனை வரவேற்றனர். அவ்விடத்திலேயே ஒரு நன்னுளில் அந்தணர் அருமறை ஓத, அறவோர் வாழ்த்த உதயணன் வாசவதத்தையை மணம் செய்து கொண்டான்.

இஃது இங்ஙனமாக, யூகி உச்சியினியில் உள்ள தன் நண்பர்கள் அனைவரையும் உதயணனிடம் செல்லுமாறு அனுப்பிவிட்டுச் சாங்கியத் தாயை அழைத்துக் கொண்டு புட்பக நகருக்கு வந்து சேர்ந்தான். அங்கு அவன் இடவகனிடம் உதயணனைப் பற்றி உசாவினன். இடவகன், அவன் வாசவதத்தையை மணம் புரிந்தது முதல் யாவற்றையும் உரைத்துப் பின்னர், அவன் வாசவதத்தையுடன் வாழ்தலையே பெரிதென நினைத்துக் கௌசாம்பியைக் கைப்பற்றும் நோக்கமின்றி இருக்கின்றதை மிகவும் வருத்தத்துடன் விளம்பினன்.

இன்ப வாழ்வை விடுத்துத் தான் இழந்த நாட்டைத் திரும்பவும் பெற உதயணனை ஊக்குவிக்கச் சிறந்த வழி வாசவதத்தையை அவனிடமிருந்து பிரித்தலே யென்று யூகி உணர்ந்தான். ஆகையால்

சாங்கியத் தாயை அதற்குத் துணை புரியுமாறு வேண்டினன். சாங்கியத் தாயும் அதற்கு ஒருப்பட்டு உதயணனைக் காணச் சென்றாள்.

சாங்கியத் தாய் சயந்தி நகரடைந்து உதயணனைக் கண்டு நிகழ்ந்தவையெல்லாம் அறிந்து உள மகிழ்ந்தாள். பெற்றோரைப் பிரிந்ததனால் வாடும் வாசவதத்தைக்கும் அவள் தேறுதல் கூறினாள். பின்பு ஒரு நாள் அவள் வாசவதத்தையிடஞ் சென்று, "வாசவதத்தையே! உதயணன் இல்லற வாழ்வின் இன்பத்தில், இழந்த நாட்டை மீண்டும் பெறவேண்டிய கடமையை மறந்து விட்டான். நீ அவனை விட்டுச் சில காலம் பிரிந்திருப்பின் அவன் தன் கடமையைக் கவனிப்பான்" என்று கூறினாள். வாசவதத்தையும் அதற்கு உடன்பட்டாள். சாங்கியத் தாய் வாசவதத்தையின் உடன்பாட்டை யூகியிடம் தெரிவித்தாள். அவன் மகிழ்ந்து தான் இறந்து விட்டதாக உதயணனுக்குத் தெரிவிக்கவே, உதயணன் மனமுடைந்து ஆற்றொணாத்துயர் அடைந்தான். உதயணன் இவ்வாறு நிலை குலைந்ததைக் கண்ட நண்பர்கள் அவனுக்குப் பலவாறு தேறுதல் கூறி, யூகியின் மரணம் முன் போல் பொய்யாகவே இருக்கும் என்று உரைத்தனர். மேலும் அவனை மகிழ்விக்க எண்ணிச் சோலைகளும், சுனைகளும் நிறைந்த இடங்களுக்கு அழைத்துச் சென்றனர். உதயணன் அவர்களுடன் நகரத்தின் புறத்தே இயற்கை அழகு செறிந்த இடங்களில் பொழுதைப் போக்கினன். பின் ஆங்கோர் ஆசிரமத்தில் அருந்தவ முனிவர் ஒருவரைக் கண்டான். அம் முனிவர், உதயணன் தான் இழந்த நாட்டையும் நண்பனையும் திரும்பப்

பெறுவான் என்று உரைத்தார். இவ்வாறு பொழில் வளங்கண்டு அவன் சில நாட்கள் இன்புற்றிருக்கும் பொழுது, யூகி, உதயணன் மாளிகைக்கும், தான் தங்கியிருந்த இடத்திற்கும் இடையே ஒரு சுரங்க வழியை அமைத்தனன்.

சாங்கியத் தாய் உதயணனை நகருக்குத் திரும்புமாறு கூறினாள். உதயணன் வாசவதத்தையுடனும், நண்பர்களுடனும் தன் அரண்மனைக்குத் திரும்பினான். சில நாட்களுக்குப் பின் உதயணன் வேட்டையாடற்கு நண்பர்களோடு கானகம் சென்றான். அவன் சென்ற பிறகு, உருமண்ணுவா முதலியோர் யூகியின் திட்டத்தை முடிக்க எண்ணி, "வேடர்கள் நகரைத் தீயிட்டனர்" என்று பொய்ச் செய்தியைப் பரப்பி, அரண்மனையின் நாற்புறங்களிலும் தீயிட்டனர். அதைக் கண்டு திடுக்கிட்ட வாசவதத்தையையும், சாங்கியத் தாயையும் அவர்கள் சுரங்க வழியாக யூகியிடம் அனுப்பினர்.

யூகி, வாசவதத்தையிடம் "அன்னையே! மன்னன் ஆருணி கௌசாம்பியைக் கைப்பற்றியுள்ளான். உதயணன் நாட்டை மீட்கும் எண்ணமின்றி எப்போதும் உம்மிடமே இருக்கின்றான். உம் தலைவனை நன்னிலைக்குக் கொணர, நீர் சிறிதும் காலம் அவரை விட்டுப் பிரிந்திருத்தல் வேண்டும்; இப்பிரிவைப் பொறுத்துக் கொள்வீராக," என்று கூறினான்.

வேட்டையிலிருந்து திரும்பிய உதயணன் அரண்மனை தீக்கிரையாகி விட்டதைக் கண்டு திகிலடைந்தான். மற்றும், அவன் வாசவதத்தை தீயில் அகப்பட்டு இறந்தாள் என்றெண்ணித்

TS
O-7 3x/8
NS

துன்பம் மிக்கவனாய், மயங்கி வீழ்ந்தான். வாசவ-தத்தையின் பிரிவாற்றாமையால் அவன் மிகவும் வருந்திப் புலம்பினான். உருமண்ணுவா முதலிய நண்பர்கள் அவனைத் தேற்றினர்.

மனைவியும், ஆருயிர் நண்பனும் மறைந்தது குறித்து மிகவும் கவன்ற உதயணனது வருத்தத்தைப் போக்க, அவன் நண்பர்கள் **மகத நாட்டின்** தலை நக ராகிய **இராசகிரியத்**தில், மந்திரத்தில் வல்ல ஒரு முனிவர் உள்ளனர் என்றும், அவர் மறுபிறப்பை அடைந்த வாசவதத்தையைத் திரும்ப அடையச் செய்வார் என்றும் கூறினர். இதைக் கேட்ட உதய-ணனும் மகிழ்ந்து அம்முனிவரைக் காண அவர் களோடு புறப்பட்டான்.

உதயணனும் அவன் நண்பர்களும் அந்தணர் வேடம் பூண்டு, இராசகிரியத்தை அடைந்தனர். அங்கே **காகதுண்ட முனிவரைக்** கண்டனர். அவர் உதயணனை நோக்கி, "நீ இங்கு இரண்டு திங்கள் விரதத்துடன் தங்கினால் வாசவதத்தையை மீண்டும் அடையச் செய்வேன்," என்று கூறினார். அம் முனி வருடைய கட்டளைப்படியே உதயணன் மாறுவேடத் துடனேயே மகத நாட்டில் தங்கியிருந்தனன்.

உதயணனை அவன் தோழர்கள் மகத மன்ன னுடைய நண்பனாக்க வேண்டும் என்று முயன்ற னர். அவ்வமயம் இராசகிரியத்தில் காமன் விழா கொண்டாடப்பட்டது. மகத மன்னன் மனைவியின் தங்கை **பதுமாவதி** தோழியரோடு காமவேள் கோட் டத்தை அடைந்தாள். அங்கு ஒரு புன்னை மரத்தின் நிழலில் உதயணனைக் கண்டு அவன் மேல் அன்புடை

136103

யவளானுள். உதயணனும் அவள் வாசவதத்தை போன்ற எழிலுடன் விளங்குவதைக் கண்டு அவள் பால் அன்புகொண்டனன். ஒரு நாள் பதுமையின் தோழி உதயணனிடம் வந்து, "நீ யார்? உன் ஊர் யாது?" என்று வினவினள். உதயணன் தான் காந்தார நாட்டைச் சேர்ந்த ஓர் அந்தணன் என்றும், தன் பெயர் **மாணகன்** என்றும் கூறினுன். இதன் பின் உதயணன் பதுமைபால் கழி பெருங் காதலுற்ருன்.

மகத மன்னன் தன் தந்தை வைத்த புதையலைக் கண்டுபிடிக்க வியலாது வருந்துகின்ருன் என்பதை உதயணன் அறிந்து, மாறு வேடங் கொண்டு அரண் மனைக்குச் சென்று அரசனிடத்தில் தான் புதையல் இருக்கும் இடத்தையும், நீர் நிலைகள் உள்ள இடங் களையும் காண வல்லவன் என்று கூறினுன். பின் மகத மன்னனுடைய வேண்டுகோளின்படியே உதயணன் அப் புதையல் இருக்குமிடத்தை அறிவித் தான். மேலும் அவன் அரண்மனையில் நீர் நிலைகள் உள்ள இடங்களையும் காண்பித்தான். அவ்விடங்களை அகழ்ந்து பார்த்தபோது உதயணன் கூறியவாறு புதையலும், நீர் நிலைகளும் இருக்கக்கண்ட மகத மன்னன், மிக்க மகிழ்வுற்று உதயணனுக்குச் சிறப்புக் களைச் செய்து, அவனை அரண்மனையில் தங்கியிருக்கும் படி செய்தான்.

இந்நிலையில், கேகய நாட்டு அரசன் பதுமையை மணஞ் செய்துகொள்ள விரும்பிப் பல பரிசுகளை மகத மன்னனுக்கு அனுப்பித் தானும் இராசகிரியத் துக்கு வந்தான். மகத மன்னனும் அவனை அன்புடன்

வரவேற்று உபசரித்தான். அப்போது மகத மன்ன னிடம் அழுக்காறு கொண்ட விரிசிகன் முதலிய சிற்றரசர்கள் ஒன்றுகூடி, இராசகிரியத்தைத் திடீ ரென்று முற்றுகையிட்டனர். மகத மன்னன் செய்வ தறியாது திகைத்தான். பதுமை இச் செய்தியை மாணகனுக்கு உணர்த்தவே, அவன் தன் நண்பர் களுடன் ஒரு சூழ்ச்சியால் அம் முற்றுகையை நீக்க எண்ணினன். உதயணனும், அவன் நண்பர்கள் வயந்தகன், இடவகன் ஆகியோரும் குதிரை வியா பாரிகள் போன்று வேடம் பூண்டு, முற்றுகையிட் டிருக்கும் பகையரசர்களிடம் சென்று தாங்களும் மகத மன்னனுக்குப் பகைவர் என்று கூறி அவர் களோடு சேர்ந்துகொண்டனர். பின்னர் ஒரு நாள் அவர்கள் நள்ளிரவில் வாட்களையுருவிக் கொண்டு விரிசிகனுடைய போர் வீரர்களைக் கொன்று, அவர் களிடை மிகுந்த கலக்கத்தை யுண்டு பண்ணி, அவர் களைத் திரும்பி ஓடச் செய்து விட்டனர்.

வெற்றி பெற்ற உதயணனின் நண்பர்கள் வயந்-தகனை நோக்கி, "பகைவர்கள் இராசகிரியத்தை முற்றுகையிட்டதை யறிந்த உதயணன் தன் தந் தைக்கும், மகத மன்னனுக்கும் இருந்த தோழமை யைக் கருதி முற்றுகையிட்ட பகைவரை வென்று அவர்களைத் துரத்தினன். அவன் இராசகிரியத்திற்கு இப்போது வந்துள்ளான்" என்று மகத மன்னனிடம் தெரிவிக்கும்படி கூறியனுப்பினர். மகத மன்னன் வயந்தகன் கூறியதைக் கேட்டுப் பெரு மகிழ்வு கொண்டு, உதயணனை மிக்க சிறப்போடு வரவேற்றுத் தன்னுடன் தங்கியிருக்கும்படி செய்தான்.

தோற்றேடிய விரிசிகன் முதலியோர் தங்களுக்குக் குதிரை வியாபாரிகளால் தீங்கு நேர்ந்தது என்று அறிந்து, மறுபடியும் ஒன்றுகூடி இராசகிரியத்தை முற்றுகையிட்டனர். இம்முறை மகத மன்னன் அவர்களை எதிர்க்கத் தானே படைகளுடன் செல்ல விரும்பியபோது, உதயணன் தானே செல்வதாகக் கூறிப் படைகளுடன் ஏகினன். அவனுடன் கேகய தேசத்து அரசனும் படைகளுடன் சென்றான்.

உதயணன் வீரத்துடன் போர் புரிந்து பகைவரை முறியடித்தனன். ஆனால் கேகயத்தரசன் பகைவர்களால் கொல்லப்பட்டான். வெற்றியோடு திரும்பிய உதயணனை மகத மன்னன் சிறப்போடு வரவேற்றான்.

மகத மன்னன் உதயணனுடைய உதவிக்குக் கைம்மாருகப் பதுமையை அவனுக்கு மணம் செய்து கொடுக்கக் கருதினன். இதையறிந்த பதுமை, தான் மாணகனைத் தவிர வேருருவரையும் மணக்க மாட்டேன் என்றனள். உதயணன் தானே மாணகன் என்று பதுமைக்கு அறிவிக்க ஒரு வழி செய்தனன். தன் நண்பனுகிய இசைச்சனுக்குப் பதுமையின் தோழி யாப்பியாயினியை மணம் செய்வித்தான். மணம் நிகழ்ந்தபோது உதயணன் குரலைக் கேட்ட யாப்பியாயினி அவனே மாணகன் என்று அறிந்து பதுமைக்குத் தெரிவித்தனள்.

ஒரு நன்னாளில் உதயணன் பதுமையை முறைப்படி மணந்தனன். பின் தன் நண்பர்களுடன் சயந்திக்குச் செல்லவேண்டும் என்று மகத மன்னனுக்கு அறிவித்தான். மகத மன்னன் உதயணனேடு

நால்வகைப் படைகளையும் அமைச்சர் குழுவையும் அனுப்பி, ஆருணியை வென்று உதயணன் கௌசாம்பியைத் திரும்பவும் அடையச் செய்யவேண்டுமென்று அவ்வமைச்சருக்கு ஆணையிட்டனர். உதயணன் இப்படைகளுடன் சென்று கௌசாம்பியை முற்றுகையிட்டனன். அப் போரில் ஆருணியின் படை முறியடிக்கப்பட்டு, உதயணன் வெற்றி வீரனாக நகருக்குள் நுழைந்தனன். கௌசாம்பியின் மக்கள் உதயணன் வருகையைக் கண்டு அகமிக மகிழ்ந்தனர்.

கௌசாம்பியில் உதயணன் ஆருணியின் கொடுங்கோலாட்சியைப் போக்கிச் செங்கோல் முறைமையை நிறுவி, குடிமக்களின் துயர் களைந்தான். தான் உச்சியினியினின்றும் மீண்டுவர உதவி புரிந்த பத்திராபதி என்ற யானைக்கு அது இறந்த இடத்தில் ஓர் எழில்மிக்க மாடம் அமைத்து, அதற்கு வழிபாடு செய்ய ஏற்பாடு செய்தான். பின்னர் ஒரு நாள் உதயணன் இனிய யாழோசையைக் கேட்டு, அதை வாசித்துக் கொண்டிருந்த அஞ்சுகனை வரவழைத்து, அந்த யாழ் அவனுக்கு எங்ஙனம் கிடைத்தது என்று கேட்டனன். அஞ்சுகன் அது தனக்குக் காட்டில் மூங்கில் மரம் ஒன்றிலிருந்து கிடைத்ததெனக் கூறவே, அது,தான் முன்பு இழந்த கோடபதி யாழ் என்று அறிந்து மகிழ்ந்தனன். அவன் அந்த யாழைப் பெற்றுக்கொண்டு அஞ்சுகனுக்குப் பல பரிசுகளை அளித்துப் பாராட்டினன்.

கோடபதியைப் பெற்ற கோமான் வாசவதத்தையின் பிரிவால் வாட்டமுற்றிருந்தனன். இது

காறும் மறைந்திருந்த யூகி, தன் காரியமனைத்தும் முடிந்தமை நோக்கி, வாசவதத்தையை மீண்டும் உதயணனிடம் சேர்ப்பிக்க வேண்டியதைக் குறித்து, உருமண்ணுவாவிடம் ஒருசெய்தி அனுப்பினான். உரு-மண்ணுவா மகிழ்ந்து யூகியைக் கண்டு வாசவதத்தை முதலியோரைக் கௌசாம்பிக்கு அழைத்துவந்து, அந்நகர்ப்புறத்தே **மதுகாம்பீரம்** எனும் சோலையில் தங்கச் செய்தான்.

வயந்தகன், உதயணனிடம் "ஐய! முன்பு இராசகிரியத்தில் வாசவதத்தையை மீண்டும் அடைய வழி கூறிய பெரியார் நம் நகர்ப்புறத்தே வந்துள்ளார். நாம் அவரைக் காணலாம்," என்று கூறினான். அங்ஙனமே வயந்தகன் உதயணனை மது-காம்பீர வனத்திற்கு அழைத்துச் செல்ல அங்கு முனிவர் தோற்றத்திலிருந்த யூகியையும், வாசவ-தத்தையையும், சாங்கியத் தாயையும் கண்டு இறும்பூதெய்தினன். வாசவதத்தையைத் தான் மீண்டும் பெற்றதை நகர் முழுவதும் தெரிவித்து, மிகுந்த உவகையோடு உதயணன் அரண்மனைக்குச் சென்றனன். அங்குப் பதுமைக்கு வாசவதத்தை-யைக் காட்டினன். இருவரும் ஒருவரையொருவர் தழுவி அன்பு பாராட்டினர்.

சின்னாட்களுக்குப் பின்னர், யூகி தான் பரப்பிய பொய்ச் செய்திகளனைத்துக்கும் காரணங்கள் கூறிய போது, உதயணன் யூகியின் அன்பின் பெருக்கையும் அறிவின் ஆற்றலையும் பலபடப் பாராட்டி மகிழ்ந்தான்.

உதயணன் தனக்குப் பல வகையிலும் உதவி புரிந்த நண்பர்களனைவருக்கும் நாடும், நகரங்களும்,

மற்றும் பல பரிசுகளும் பரிவோடு தந்தனன். உருமண்ணுவாவைச் சேனுதிபதியாக நியமித்துப் பதுமையின் தோழி இராசனை என்பாளை அவனுக்கு மணம் செய்வித்தான். யூகிக்குச் சேதி நாட்டாட்சியை அளித்தான். தன் நண்பர்கள் அனைவரையும் தன்னுடன் இருக்க வேண்டினன். இந்நிலையில் பிரச்சோதனனும் உதயணனுக்குப் பல பரிசுகளை அனுப்பித் தான் இழைத்த தீமைகளை மறந்து விடுமாறு கூறி அனுப்பினுன். இவ்வாறு உதயணன் சீரிய முறையில் ஆட்சி செலுத்திச் சிறப்புற வாழ்ந்து வந்தான்.

உதயணன் தனக்குப்பின் பட்டமேற்க ஒரு மகன் இல்லையே என்று வருந்தினுன். கடவுள் அருளால் வாசவதத்தை ஓர் ஆண் குழந்தையைப் பெற்றனள். மன்னன் அக் குழந்தைக்கு நரவாண தத்தன் எனப் பெயரிட்டு, அரசர்க்குரிய முறையில் சிறப்புடன் வளர்த்தான். அந்நரவாண தத்தன் மணப் பருவம் எய்திய போது மதன மஞ்சிகை என்னும் நங்கையை அவனுக்கு மணம் செய்வித்தான்.

சில காலத்திற்குப் பின் உதயணன் துறவியாக எண்ணி, ஆட்சியை நரவாணனிடம் ஒப்புவிக்கக் கருதினன். அவன் தானும் துறவு மேற்கொள்வதைத் தெரிவிக்கவே பதுமையின் மகன் கோமுகனுக்கு முடிசூட்டினன். பிறகு தேவியரும் நண்பரும் தன்னைச் சூழ்ந்து வர, கானகம் சென்று தருமச்சுருதி என்னும் முனிவரை அடைந்து தவம் செய்தான். உதயணனும் இறைவனருளாலே அவன்றாள் வணங்கி இன்பவுலகு எய்தினன்.

---

# 4. சீவகனும் காந்தருவதத்தையும்

பரத கண்டத்தில், முற்காலத்தில் ஏமாங்கத நாடு என்ற ஒரு நாடு இருந்தது. இராசமாபுரம் என்பது அதன் அழகிய தலைநகரமாகும். அது நீர் வளத்திலும், நிலவளத்திலும் ஒப்புயர்வற்று விளங்கியது. வளம்மிக்க இந்நாட்டினைக் குரு குலத்தில் தோன்றிய சச்சந்தன் என்னும் அரசன் நீதிமுறை வழுவாது, செங்கோலாச்சி வந்தான். சச்சந்தன் தன் மாமனாகிய சீதத்தன் என்னும் அரசனுடைய பெண்ணணங்காகிய விசயை என்பாளைக் கடிமணம் புரிந்து கொண்டான். சீதத்தன் விதய தேசத்து மன்னன். அந்நாடும் ஏமாங்கத நாட்டைப் போன்றே சீரும் சிறப்பும் மிகுந்து விளங்கியது.

சச்சந்தன் தன் அரசியல் கடமைகளைக் கட்டியங்காரன் என்னும் தன் அமைச்சனிடம் ஒப்புவித்தான். இவ்வாறு மன்னன் செய்த பொழுது, நாட்டின் நலனையே கருதும் அமைச்சர் தருமதத்தன், ஆட்சி மாற்றத்தின் மூலம் வரும் தீங்கை அவனுக்கு எடுத்துரைத்தனன். ஆனல் சச்சந்தன் எதையும் செவி மடுக்காது, கட்டியங்காரனிடம் ஆட்சியின் முழுப் பொறுப்பையும் ஒப்புவித்துவிட்டு, விசயையோடு இன்பமாக வாழ்ந்து வந்தான்.

இவ்வாறு சச்சந்தன் இன்பமுடன் வாழ்ந்திருக்கையில், ஒரு நாள் விடியற்காலையில் விசயை மூன்று கனுக்களைக் கண்டு பெரிதும் கலக்க முற்ருள். அக்கனவு நிகழ்ச்சிக்கு அவள் பொருளுணர

முடியாது, அவற்றைத் தன் கணவனுக்குக் கூற, அவன் அதனாலுறும் பயன்களைக் கூறினான். அவைகளில் தீய பயனுடைய ஒரு கனவின் பொருட்டு வருத்தமுற்ற விசயையை அவன் பெரிதும் முயன்று தேற்றினன். பின்னர் அரசியும் கருவுற்றாள். விச-யைக்கும் தனக்கும் ஏதாகிலும் துன்பம் நேர்ந்தால் அதனின்றும் தப்புவதற்கு ஒரு மயிற் பொறியைச் செய்தனன்.

இதற்குள், ஆட்சிப் பொறுப்பு முழுவதையும் ஏற்ற கட்டியங்காரனுக்குச் சச்சந்தனை அழித்து,நாடு முழுவதற்கும் தானே தலைவனாக வேண்டும் என்ற தீய எண்ணம் தோன்றிவிட்டது. அதனால் அவன் தனது மைத்துனன் மதனனோடும், தனக்குரிய அமைச்சரோடும் கலந்தாலோசித்தான். சச்சந்தனுக்குப் பகையாக ஒரு தெய்வம் மன்னவனைக் கொல்லுமாறு தன்னை ஊக்குவிக்கிறது என்றும் ஒரு பொய்யுரைத்தான். தருமதத்தன் போன்ற நல்லமைச்சர் அவனுடைய அநீதியான திட்டத்தைக் கண்டித்து, அவனுக்கு அறிவுரை கூறியபோதும், அவற்றையெல்லாம் மறுத்து, படைகளைக் கொண்டு அரசனிருப்பிடத்தைச் சூழ்ந்துக் கொண்டான். தனக்குற்ற பேராபத்தை உணர்ந்த மன்னன், விசயைக்குப் பலவாறு தேறுதல் கூறி, அவளை மயிற் பொறியில் ஏற்றி அனுப்பிவிட்டான். பிறகு சச்சந்தன் தனியனாய்க் கட்டியங்காரன் படைகளை எதிர்த்துப் பொருதான். ஆயினும் கட்டியங்காரனால் கொல்லப்பட்டான். கட்டியங்காரன் வெற்றி முரசம் அறைந்து, தான் ஏமாங்கத நாட்டைக் கைப்பற்றியதை மக்களுக்கு அறிவித்தனன்.

ஆகாய வழியே சென்ற விசயை, அம்முரசொலி கேட்டுக் கலங்கித் தான் ஊர்ந்து வரும் மயிற் பொறி யின் விசையை இயக்க மாட்டாமல் மூர்ச்சையடை யவே, அப்பொறி தொடர்ந்து செல்லாமல் அந் நகரத்தைச் சார்ந்த ஒரு மயானத்திடையே மெது வாக விழுந்தது. தன்னந்தனியளாய்த் தான், அந்த இடுகாட்டில் வந்தடைந்தது குறித்து அவள் பெரி தும் வருந்தி மயக்கமுற்ருள். அப்பொழுது அவள் அவ்விடத்திலேயே ஓராண் மகவை ஈன்ருள். அக் குழந்தையின் அழகு தவழும் இளமுகத்தைக் கண்டு, அவள் ஓரளவு அரசனுடைய மறைவை மறந்தனள். ஆயினும் தனது தனிமையையும், அம் மயானத்தின் சூழ்நிலையையும், அரண்மனையில் பிறக்க வேண்டிய குழந்தை அடவியில் பிறக்க நேர்ந்த நிலையையும், இளங்குழவியின் இரங்கத்தக்க நிலையையும் உன்ன உன்ன அவளது புலம்பல் அதிக மாயிற்று.

அப்போது கதிரவன் மேற்கடலில் சாயவே, எங் கும் இருள் சூழ்ந்தது. செய்வதறியாது திகைக்கும் அம் மாதரசியின் நிலைமையைக் கண்டிரங்கிய அவ் விடுகாட்டின் கண்ணுள்ள ஒரு தெய்வம், விசயை யுடன் எஞ்ஞான்றும் இருந்து பணி புரிந்து கொண் டிருந்த சண்பகமாலை என்னும் தோழியின் வடிவம் பூண்டு, அவள் அருகினில் வந்து நின்றது. வந்த அத் தெய்வம் விசயைக்குப் பலவாறு ஆறுதல் கூறி, அக் குழவி பிற்காலத்தில் கட்டியங்காரனைப் பழிவாங்கி, இஞ்ஞாலத்தைக் காக்கும் மன்னவனுவன் என்று விளம்பியது. பின்னர் அவ்வாறு அவனை வல்லவனுக் கத் தக்க ஒருவன் அவ்வழியே வருவான் என்றும்,

அவன் அக்குழவியை எடுத்துச் செல்வானுதலால் அவர்கள் ஒளிந்திருத்தல் நலம் என்றும் கூறியது. விசயை தன் மகனைப் பிரிய மனமில்லாவிடினும், கட்டியங்காரனைப் பழி வாங்கும் பொருட்டு, அவ்வாறு செய்யத் துணிந்தனள். அக்குழவிக்குப் பாலூட்டி, விரலில் சச்சந்தன் எனப் பெயரெழுதப்பட்டுள்ள மோதிரத்தை அணிந்து, அதனை ஓர் அழகிய ஆடையின்மேல் கிடத்தினள். பின்னர், அவளும் அத்தெய்வமும் ஒரு புறம் ஒதுங்கி மறைந்து நின்றனர். அப்போது அவ்வழியே இராசமாபுரத்தில் செல்வாக்கு மிகுந்து வாழ்ந்து வந்த **கந்துக்கடன்** என்ற வணிகன், மரித்த தன் குழந்தையைப் புதைப்பதற்கு வந்தனன். அவன் அம் மயானத்திடையே தனியாக இருக்கும் அக் குழவியைக் கண்டு பெருமகிழ்ச்சியுற்றனன். உடனே அவன் தன் இறந்த குழவியை ஒரு புறத்தே கிடத்திவிட்டு, அக்குழவியின் கையிலுள்ள மோதிரத்தைக் கொண்டு, அது அரச பரம்பரையைச் சேர்ந்தது என அறிந்து, அதை யாரும் அறியாதபடி மறைத்துக் கொண்டனன். அக்குழந்தையை அவன் கையில் எடுத்தபோது அது தும்மிற்று. அப்போது விசயையுடன் மறைந்திருந்த தெய்வம் "சீவ" என்று வாழ்த்தியது.

அவ் வாழ்த்துரையைக் கேட்ட கந்துக்கடன், அதை நன்னிமித்தமாகக் கொண்டு, மகிழ்வுடன் அதனைத் தன் இல்லத்திற்கு எடுத்துச் சென்முன். தன் மனைவியாகிய **சுநந்தை**யிடம் அக்குழவியைக் கொடுத்து, "உன் மகன் இறந்திலன்" என்றுரைத்தனன். அது கேட்ட அவள் பெரிதும் மகிழ்வுற்றுத் தன் தோழியருடன் அம்மகிழ்ச்சியைக் கொண்டாடி

ளுள். பின்னர் ஒரு நன்னாளில், முன்பு தெய்வம் "சீவ"வென்று வாழ்த்தியது பற்றிச் சான்றோர் அப் பிள்ளைக்குச் **சீவகன்** என்று பெயரிட்டு அன்புடன் அழைப்பாராயினர்.

இஃது இங்ஙனம் இருக்க, மயானத்தில் புத் திரனைப் பிரிந்த விசயை, அவன் பிரிவாற்றாமையால் மயங்கினள். தோழி வடிவில் உடனிருந்த தெய்வம், அவளுக்குப் பலவாறு அறவுரைகள் கூறித் தேற்றி யது. பின்னர் அவளைத் **தண்டகாரணியம்** என்னும் வனத்திடை உள்ள தவப் பள்ளிக்கு அழைத்துச் சென்றது. அவள் அத்தாபதர் பள்ளியில் உள்ளோ ருடன் தானும் ஒரு தவசியாகத் தவ வேடம் பூண் டனள். அங்குத் தன் மகனுக்கு ஆக்கம் உண்டாகும் பொருட்டுக் கடிய நோன்பியற்றி வரலானாள். இவ்வளவு நன்மை செய்த அத்தெய்வம், அரசியை அப்பள்ளியின்கண் உறையும் அறவோரிடம் அடைக் கலப் பொருளாகக் கொடுத்துத் தான் அவளுக்கு அவ்வப்போது வந்து உதவுவதாகக் கூறி, அவளை விட்டுப் பிரிந்து சென்றது.

இராசமாபுரத்தில் கந்துக்கடன் வீட்டில் சீவகன் வளர்பிறை போன்று, நாளொரு மேனியும் பொழு தொரு வண்ணமுமாக வளர்ந்து வந்தனன். சீவகன் இளமையின் எல்லையைக் கடந்தபோது, அவனை **அச்சணந்தி** என்னும் நல்லாசிரியரிடம் பல கலைகளை யும் கற்குமாறு பணித்தனன். சீவகனும் ஆசிரியருக் குக் கீழ்ப்படிந்து, பல கலைகளையும் கசடறக் கற்றுக் கண்டோர் யாவரும் போற்றும் எழில் உருவம் பெற் றுக் காளைப் பருவத்தையடைந்தனன். அவனுக்குப்

பல கலைகளையும் உணர்த்திய ஆசிரியர், அவனுக்கு அற நூல்களின் சாரத்தையும் புகட்டுவித்தார். இவ்வாறு சீவகனைச் சிறந்த அறிஞனாகச் செய்த அவ்வாசிரியர் அவனுக்கு அவன் பிறப்பையும் உணர்த்தினார். சச்சந்தனுக்கும் விசயைக்கும் மகனான அவன், கட்டியங்காரன் செய்த தீங்கால் கந்துக்கடன் இல்லத்தில் வளர்ந்து வரும்படி நேர்ந்த ஊழ்வினைப் பயனைக் கூறினார். கட்டியங்காரனின் கொடுமையை அறிந்த சீவகன் உடனே அவனைக் கொல்லவேண்டும் என எழுந்தனன். அது கண்ட ஆசிரியர் இன்னும் ஓராண்டுவரைக்கும் பொறுத்திருக்க வேண்டினார். அதுவரையில் தன்னை இன்னான் என்று வெளிப்படுத்தாமல் இருக்க வேண்டுமென்றும் பணித்தனர். ஆசிரியரின் கூற்றுக்கு மாற்றுரைக்க முடியாத சீவகன் அதற்கு இசைந்தனன்.

பின்னர் ஆசிரியர் தன் வரலாற்றையும் சீவகனுக்கு உரைத்தனர். தான் **வாரணவாசி** என்ற நகரத்தின் மன்னனான **உலோகபாலன்** என்றும், ஆட்சியைத் துறந்து தவமியற்றுகையில் "யானைத் தீ" என்னும் கொடும் பசிநோய் தன்னைப் பற்றியது என்றும், இராசமாபுரத்தை அடைந்து சீவகனைக் கண்டபின் அந்நோய் நீங்கவே, அவன் மேல் பெருவிருப்புற்று அவனுக்குக் கல்வி கற்பித்தனன் என்றும், தன் எண்ணம் முற்றியதால் தான் தவம் இயற்றப் போவதாகவும் கூறினர். இதைக் கேட்ட சீவகனும் கந்துக்கடனும் அவருடைய பிரிவிற்கு வருந்திப் பின்னர் அவருக்கு விடை கொடுத்தனுப்பினர்.

அச்சணந்தி யாசிரியர் சென்றபின், சீவகன் கட்டியங்காரனை வீழ்த்துவதற்குக் காலத்தை எதிர் நோக்கிப் பொறுமையோடிருந்தான். மேலும் வீணைக் கலையிலும் வல்லவனாகி, மகளிரேயல்லாது ஆடவரும் கண்டு அழுக்காறடையத்தக்க இளமை யெழிலுடன், அவன் இராசமாபுரத்தே வாழ்ந்து வந்தனன்.

இவ்வாறிருக்கையில், ஒரு நாள் நகரத்து எல்லையிலுள்ள ஒரு மலையின்மேல் மேய்ந்து கொண்டிருந்த அந்நகரத்துப் பசுக் கூட்டங்களைக் காட்டகத்தே உறையும் வேடர்கள் வந்து கவர்ந்து சென்றனர். பசுக்கூட்டங்களைக் கவர்ந்து சென்ற வேடுவரை எதிர்க்க முடியாது வருந்திய ஆயர்குல மக்கள் தங்கள் துன்பத்தைக் கட்டியங்காரனிடம் சென்று முறையிட்டனர். வேடுவர்கள் தகாத முறையில் ஆனிரையைக் கவர்ந்து சென்றதை யறிந்த கட்டியங்காரன் மிகுந்த கோபமடைந்து, உடனே தன் புதல்வர் நூற்றுவரையும், மைத்துனனையும் நோக்கி, "நீவிர் பெரும் படையுடன் சென்று நிரை கவர்ந்த அவ்வேட்டுவரைத் தோற்கடித்து அவ்வானிரையை மீட்டு வருவீராக," என்றனன். அரசன் சொல்கேட்ட அவர்களும் நாற்படைகளும் கொண்ட ஒரு பெருஞ் சேனையுடன் அவ்வேடுவர் உறையும் காட்டிற்குச் சென்று அவருடன் பொருதனர். ஆயினும், அவ்வேடர்கள் பொழியும் அம்புமாரியை எதிர்க்கமாட்டாது, அப்படைகள் சிதறியோடி நகரத்துக்குத் திரும்பி விட்டன. இதையறிந்த அரசன் கட்டியங்காரனும் செய்வதறியாது திகைத்தனன்.

ஆயர்குலமக்களும் அரசனின் தோல்வியைக் கண்டு மனங்கலங்கினர். அப்போது அவ்வாயர் குலத்

தலைவனாகிய **நந்தகோன்** என்பான், "நிரையை மீட்டு வருபவர் யாவராயினும் அவருக்கு என் அழகிய மகள் **கோவிந்தையை** மணம் செய்து தருவேன்," என்று தெரிவித்தனன். நகரத்து மக்கள் அனைவரும் இதையறிந்தனர். அழகணங்காகிய கோவிந்தையை மணக்க விரும்பிய இளைஞரும், அரசன் படைகளையே முறியடித்த வேடரை எதிர்க்க அஞ்சி வாளா விருந்தனர். இதையறிந்த சீவகன் தான் அந்நிரையை மீட்டுவர உறுதி கொண்டு, "அவ்வாறு செய்யாவிடின் யான் கட்டியங்காரனைப் போல் பழியுடையவனாவேன்" என்று சூளுரைத்துத் தேரேறிப் போர்க் கோலங் கொண்டு தன் துணைவருடன் அவ்வேடுவர் இருப்பிடம் நோக்கிச் சென்றனன். அவ்வேடர், தாம் முன்பு அரசனுடைய சேனையையே தோற்கடித்து விட்டதையெண்ணி, இறுமாப்புடன் சீவகனை எதிர்த்தனர். சீவகன் அவ்வேடர் ஐம்பத்தாறுயிரவரும் தனக்கு ஒருவாற்றானும் பகைவரல்லராதலின் அவர்களைக் கொல்லாது அச்சுறுத்தித் துரத்தினன். அவர்கள் தோற்றோடிய பின், நிரைகளை மீட்டுக் கொணர்ந்தான். இதையறிந்த ஆயர்கள் மிகுந்த உவகையடைந்தனர். கட்டியங்காரன் தன் படைகள் தோல்வியுற்றிருக்க மற்றொருவன் வெற்றியுற்றதை உண்ணிக் கலங்கினான். பின்னர், பொறாமையின் காரணமாக வெகுண்டான். வெற்றியுடன் திரும்பிய சீவகனை அந்நகரத்து மக்கள் போற்றி வாழ்த்தினர்.

வெற்றி வீரனாகத் திரும்பிய சீவகனைக் கந்துக்கடனும் அவனுடைய மனைவியும் முகமலர்ச்சியிடன் வரவேற்று மகிழ்ந்தனர். ஆனிரைகள் மீட்கப்

பட்டதையறிந்த ஆயர் தலைவன் நந்தகோன், பெரு மகிழ்வுற்றுத் தனக்குப் பேருதவியைச் செய்த சீவகனுக்குத் தான் முன்பு பறையறைவித்த வண்ணம் தன் மகள் கோவிந்தையை மணம் செய்து கொடுக்க எண்ணினன். ஆகையால் சீவகனையடைந்து தன் விருப்பத்தைத் தெரிவித்தனன். இதைக் கேட்ட சீவகன் கோவிந்தையை மணத்தல் தனக்குப் பொருந்தாதென எண்ணிக் கோவிந்தையின் நல்லியல்புகளைக் கேள்வியுற்றதால் அவளைத் தன் தோழன் வணிகர்குலச் செல்வன் **பதுமுகனுக்கு** மணஞ் செய்து கொடுக்க முடிவு செய்தனன். நந்தகோனும் அவ்வாறே மண வேற்பாடுகளை மிகச் சிறந்த முறையில் செய்வித்துக் கோவிந்தையை பதுமுகனுக்கு மனைவியாக்கினன்.

**வித்தியாதர** நாட்டிலே **கலுழவேகன்** என்பவன் அரசு புரிந்து வந்தான். கலுழவேகனுக்குக் **காந்தருவதத்தை** என்ற ஒரு மகள் இருந்தாள். அவள் கண்டோர் மயங்கும் கட்டழகு பெற்று, மங்கைப் பருவமுற்றிருந்தாள். காந்தருவதத்தை பிறந்தவுடன் அவளுக்குச் சோதிடம் கணித்த சோதிட வல்லுநர், கலுழவேகனிடம், அவளுக்கு மணவினை ஏமாங்கத நாட்டின் தலைநகராகிய இராசமாபுரத்தில் நிகழும் என்று கூறினர். ஆதலால் மணப் பருவம் அடைந்த காந்தருவதத்தைக்குச் சோதிடர் கூறியவாறு செய்விக்க எண்ணித் **தரன்** என்னும் வித்தியாதரனை அழைத்து "இராசமாபுரத்தில் வாழும் **சீதத்தன்** என்னும் வணிகன், வாணிபம் காரணமாக ஒரு தீவிற்குச் சென்று பெரும் பொருளீட்டித் தன் ஊருக்கு மரக்கலத்தின் மூலம் திரும்பிக் கொண்டிருக்கிறான். அவ் வணிகனைத்

தெரிந்து அவனை என்னிடம் அழைத்து வா" என்று கலுழவேகன் கூறினன். தரனும் அவ்வாறே செய்வ தாக இசைந்தனன்.

சீதத்தன் என்பான் இராசமாபுரத்தே செல்வச் சிறப்புடன் வாழும் பெருங்குடி வணிகரில் முதன்மை யானவன். அவனுடைய கற்புடைய மனைவி பதுமை என்பவள். சீதத்தன் "திரை கடலோடியும் திரவி யந்தேடு" என்னும் முதுமொழிக் கேற்பக் கடல் கடந்து சென்று வாணிபம் செய்து மிகுந்த பொருள் ஈட்ட விரும்பினுன். அவன் ஒரு கப்பலில் தன் நாட் டிலுள்ள பண்டங்களை ஏற்றிக் கொண்டு தொலை வில் உள்ள ஒரு செல்வ மிக்க தீவை அடைந்தனன். அத் தீவில் அவன் தான் கொண்டு சென்ற பொருள் களனைத்தையும் விற்றுத் தன் நாட்டில் வாணிபம் செய்யத்தக்க பொருள்களை ஏற்றிக் கொண்டு ஊர் திரும்ப எண்ணினன்.

சீதத்தன் அவ்வாறு இராசமாபுரத்திற்குத் திரும்புகையில், அவனுடைய கப்பல் புயலிடை அகப்பட்டுக் கடலில் மூழ்கியது. சீதத்தன் மட்டும் எவ்வாறோ ஒரு மரத்துண்டைப் பற்றியவனாய் ஒரு தீவை மெல்ல அடைந்தான். அங்கு அவன், ஒருவன் தன்னை நோக்கி வருதலை அறிந்தான். அவ்வாறு வந்தவன் கலுழவேகன் அனுப்பிய தரன் என்னும் வித்தியாதரன் ஆவன். சீதத்தன் தன் கப்பல் கட லில் கவிழ்ந்தது அத்தரனது விஞ்சையின் விளைவே என்பதை அறியான்! தரன் சீதத்தனிடம் வந்து அவனிடம் மிகுந்த அன்புடன் பேசித் தான் தன்னு டைய விஞ்சை வன்மையால் அவனுடைய இழந்த

கப்பலை மீட்டுத்தர முடியும் என்று கூறி அவனைத் தேற்றினன்.

பின்னர் அவன் சீதத்தனைக் கலுழவேகனிடம் அழைத்துச் சென்முன். கலுழவேகன் சீதத்தனை மிகச் சிறப்போடு வரவேற்று, அன்புடன் உபசரித்தான். பின்பு அவன் தன் மகள் காந்தருவதத்தையை அழைத்து வந்து அவனுக்குக் காண்பித்து, "ஐய! இவளுடைய மணவினை இராசமாபுரத்தே நிகழும் எனச் சோதிடர் கூறியதால், அவளை அங்கு அழைத்துச் சென்று மணவினையை முடிக்குமாறு வேண்டுகிறேன். காந்தருவதத்தையுடன் யாழிசையில் போட்டியிட்டு வெல்பவனுக்கே அவளை மணம் புரிந்து கொடுக்கவேண்டும்" என்று கூறினன். சீதத்தன் அவ்வாறே செய்வதற்கிசைந்தனன். கலுழவேகன் சீதத்தனுக்குப் பல்வகைப் பொருள்களை அளித்து, வீணைபதி என்னும்சேடியையும், காந்தருவதத்தையையும் அவனுடன் இராசமாபுரத்துக்கு அனுப்பினன். சீதத்தன் இராசமாபுரத்திற்குப் புறப்பட்டபோது தரன் தன் விஞ்சை வன்மையால் இது வரை மறைத்து வைத்திருந்த சீதத்தனுடைய கப்பலை மறுபடியும் அவன் முன் தோற்றுவித்தனன். சீதத்தன் தன் கப்பலையும், தன்னுடன் வந்திருந்தவர் அனைவரையும் கண்டு மகிழ்ந்தனன். பின் தத்தையோடு இராசமாபுரம் அடைந்தனன்.

தன் வருகையை ஆவலோடு எதிர் நோக்கியிருந்த தன் மனைவி பதுமையிடம் சீதத்தன், நடந்தவை யாவற்றையும் கூறி காந்தருவதத்தையின் திருமணத்தைப் பற்றியும் விளம்பினன். பின்பு இரு

வரும் யோசித்துத் தத்தைக்கு ஒரு கன்னிமாடம் அமைத்து, அதனுள்ளே அவளைத் தங்குமாறு பணித்தனர். பின்பு சீதத்தன் அரசனாகிய கட்டியங்காரனிடம் தத்தையின் சரிதையைக் கூறி, அவளுக்குச் சுயம்வர மூலம் மணவினை செய்ய வேண்டியதையும் கூறினன். கட்டியங்காரனும் அதற்குடன்பட்டுச் சுயம்வரத்திற்குத் தன்னாலான உதவியைச் செய்வதாகக் கூறினன். இவ்வாறு மன்னனது அனுமதி பெற்ற சீதத்தன், அழகிய ஒரு மண்டபம் அமைத்துப் பின் தத்தையின் சுயம்வரத்தைப் பற்றிப் பறையறையும் படி ஏவலாளர்க்குக் கட்டளையிட்டனன். ஏவலாளரும், ''காந்தருவதத்தையை வீணையில் வெல்வாரே மணஞ் செய்வதற்குரியவர்'' என்று முரசறைந்து நகர் முழுவதும் தெரிவித்தனர். காந்தருவதத்தையின் சுயம்வரத்தைப் பற்றிய செய்தி நாடு முழுவதும் பரவிற்று.

தத்தையின் சுயம்வர நாளன்று, பலநாட்டு மன்னர்களும் வீரர்களும் கூட்டம் கூட்டமாக இராசமாபுரத்தே வந்து குழுமினர். தத்தை தன் தோழியாகிய வீணாபதியால் அழகுடன் அலங்கரிக்கப்பட்டாள். அவ்வாறு அலங்கரிக்கப்பட்ட தத்தை சோதிடர் கூறிய நேரம் வந்தவுடன், தோழிகள் தன்னைச் சூழ்ந்துவர மண்டபத்தை யடைந்தனள். தோழியர் நடுவே அன்னம் போல் நடந்து செல்லும் தத்தையைக் கண்ட அம் மண்டபத்திலிள்ளோர் அனைவரும் அவளுடைய அழகைக் கண்டு வியந்தனர்.

மண்டபத்தில் அமர்ந்த தத்தை, வீணையைக் கையிலெடுத்து வாசிக்கத் தொடங்கினள். அப்போது அவளுடைய தோழி வீணாபதி சபையிலுள்ளோரை,

நோக்கி, "தத்தை இப்போது வீணையில் இசைகூட்டிப் பாடுவாள். அவள் பாடி முடித்த பின்னர் வீரராகிய நீவிர் அனைவரும் தொடர்ந்து வாசிப்பீராக" என்று கூறினள். உடனே காந்தருவதத்தை வீணையை மீட்டித் தன் இனிய குரலோடு அவ்வீணையின் இசையும் ஒன்று படுமாறு மிக அழகாகப் பாடினள். அவள் பாடுகையில் அவளுடைய இசைத் திறத்தில், மண்டபத்தில் குழுமியிருந்த அனைவரும் தம் நெஞ்சைப் பறிகொடுத்து அவ்விசையில் மெய்ம்மறந்து நின்றனர். அவள் வாசித்து முடித்தபின், இசையில் வல்லவர் அனைவரும் மிக வியப்புற்றுத் தனித்தனியே சென்று வீணையோடு தம் குரலைச் சேர்த்துப் பாடினர். ஆனால் எவரும் தத்தையை வெல்ல முடியாராய்த் தோல்வியுற்றனர். இவ்வாறு அரசரும், பிறரும் தத்தையோடு வீணை வாசிக்க அம்மண்டபத்தே போந்து தோல்வியுற்றனர். இவ்வகையாக ஆறு தினங்கள் கடந்து விட்டன. ஒருவரும் தத்தையை இசையில் வெல்லாதது கண்டு, அனைவரும் "இத்தத்தையை இனி எவரே வீணையில் வெல்ல முடியுங்கொல்!" என வியந்தனர்.

காந்தருவதத்தையின் சுயம்வர நிகழ்ச்சிகளை அறிந்த சீவகன் அவ்விசைப் போட்டியில் கலந்து கொள்ள விரும்பினன். தன் விருப்பத்தைத் தன் நண்பன் புத்திசேனன் மூலம் கந்துக்கடனுக்குத் தெரிவித்து, அவன் இசைவைப் பெற்று வருமாறு அனுப்பினன். இதைக் கேட்ட கந்துக்கடன் சீவகன் வேண்டுகோளுக்கிணங்கி, அவனைப் படைகளுடன் தக்க பாதுகாப்போடு செல்லுமாறு பணித்தனன். ஏனெனில், **அனங்கமாலை** என்னும் அழகியின் காரணமாகக்

கட்டியங்காரன் சீவகன் மேல் அழுக்காறுற்று அவனைக் கொல்ல நேரம் பார்த்திருந்தனன். சட்டி-யங்காரன் விரும்பிய அவ்வனங்கமாலை அவனை விரும் பாது, சீவகன்மேல் காதலுற்றாள். ஆதலால் கட்டி-யங்காரனுக்கு அவனிடம் பகைமை உண்டாகியது.

கந்துக்கடன் கூறியவாறே சீவகன் தன் தோழ ரும் படையும் சூழ்ந்துவர, மிக்க அலங்காரத்தோடு தத்தையின் சுயம்வர மண்டபத்தை அடைந்தான். சீவகன் நண்பர்கள் சூழ்ந்துவர அம்மண்டபத் தினுள் சென்ற காட்சி காண்போர் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளுமாறு இருந்தது. இதுவரை தத்தையின் எழில் நலத்தை வியந்த வண்ணமிருந்த பலர், சீவகனைக் கண்ட பிறகு, சீவகனைக் கணவனாகப் பெறத் தத்தை தவம் செய்திருக்கவேண்டும் என் றனர். தத்தையின் தோழியரெல்லாம் சீவகனைக் கண்ணுற்று,"இவனே தத்தையைக் கைப்பிடிக்க உரி யவன். இவன் வீணைப் போரில் வெற்றியுறுவானாக" என வாழ்த்தினர். காந்தருவதத்தையோ, சீவகனைக் கண்டவுடனே அவனழகில் மயங்கித் தன்னை மறந் திருந்தாள். இவற்றை யெல்லாம் கண்ணுற்ற கட்டியங்காரன் சீவகன்பால் அழுக்காறு மேலீட் டால் உளம் வருந்தியிருந்தனன்.

இவற்றைக் கவனிக்காத சீவகன், தனக்கு உரிய இடத்தில் அமர்ந்து, வீணை வாசிக்கப் புகுந்தான். வீணாபதியோ நல்ல வீணையை விட்டுக் குற்றமுடைய வீணைகளையெல்லாம் அவனிடத்தே கொடுத்தனள். சீவகன் ஒவ்வொரு வீணையிலும் உள்ள குற்றங்குறை களைக் கூறி, அவற்றை ஒதுக்கினன். கடைசியில் நல்ல

வீணையை ஏற்று வாசிக்க ஆரம்பித்தான். அவன் வீணையின் இசையோடு தன் குரலைப் பொருத்திப் பாடிய இனிமையில் தத்தை உள்பட அம்மண்டபத்துள்ளோர் அனைவரும் மயங்கி அசைவற்றிருந்தனர். அவன் இவ்வாறு மண்ணவரல்லது விண்ணோரும் புகழும்படிப் பாடி முடித்த பின், தத்தை வீணை வாசிக்கத் தொடங்கினள். அவள் முன்னமே தம் உள்ளத்தைச் சீவகனிடம் ஒப்புவித்தபடியால், அவன் பாடிய கந்தர்வ இசையில் மயங்கியவளாய்த் தான் முன்னே பாடியதற்கு மாறுபட்டு ஏதோ பாட வேண்டுமென்று பாடினள். அவ்வாறு அவள் பாடிய போது சீவகன் பாடியது போன்று பாட முடியாது தோற்றனள். அவள் தோழியரும், வீணைப் போர் முடிவுற்றது என்றெண்ணி மகிழ்வுற்றனர். காந்-தருவதத்தையும் மனமகிழ்வோடு சீவகன் கழுத்தில் சுயம்வர மாலையை இட்டனள்.

ஆயினும் சீவகன் வீணைப் போரில் வெற்றியுற்றுக் காந்தருவதத்தையை மணப்பதை யெண்ணிய கட்டியங்காரன் பொறுமைத் தீயினால் மனம் புழுங்கினான். அங்கிருந்த அரசர்களும் அவ்வாறே சீவகன் மேல் பொறாமை கொண்டனர். இதை யறிந்த கட்டியங்காரன், "அரசர்களே! மன்னன் மகளாகிய காந்தருவதத்தையை வணிகன் மகனான சீவகன் மணந்துகொள்ளும் தகுதியுடையவனோ? அவன் வீணைப் போரில் வெற்றியுற்றுத் தத்தையை மணக்கப் போவதைப் பொறுமையோடு பார்த்துக் கொண்டிருக்கிறீர்களே! உங்கள் வீரம் என்னாவது? உங்கள் தகுதிக்குக் கீழ்ப்பட்ட ஒருவனை எதிர்க்க முடி

யாது இருக்கிறீர்களே, என்னே உமது தோள் வலிமை!'' என்று பொருமை விளேவித்தற்குரிய வார்த்தைகளே அம் மன்னர் குழாத்திடைக் கூறினன். கட்டியங்காரன் கூறியவற்றைக் கேட்ட மன்னர்கள் தத்தையின் பொருட்டுச் சீவகன் மேல் போரைத் தொடுக்க எழுந்தனர். இதைக் கண்ட வகனுடைய நண்பனுகிய பதுமுகன், அவ் வரசரின் செயலேக் கண்டு இரங்கி, அவருடைய மதியீனத்திற் காக வருந்தி, ''மன்னர்காள்! சீவகன் வீணேப் போரில் வென்றதனுல் அவன் அவளே மணக்குமரி மையைப் பெற்றுள்ளான். நீவிர் இப்போர்ச் செய லில் ஈடுபடாது உம் ஊருக்குத் திரும்பிச் செல்லுங் கள்'' என்று அறிவுறுத்தினன். ஆனுல் அவ்வரசர்கள் பதுமுகனின் அறிவுரைகளேக் கேளாது, தத்தைமேற் கொண்ட வேட்கையின் காரணமாகப் போரைத் தொடங்கினர். இதைக் கண்ட பதுமுகன், ''யாங்கள் போருக்கிளேத்த வரல்லோம்'' என்று கூறி, வில்லே வளேத்து நாணேற்றினுன். இதைக் கண்டு வருந்திய தத்தையை, சீவகன் தேற்றிப் பதுமுகனே அவளுக் குக் காவலாக இருக்கப் பணித்துத் தன் படைகளே ஒன்று திரட்டித் தானே போருக்கு ஆயத்தஞ் செய் தான். பின் அவ்வரசரை வெல்லுதற்குச் சபதம் செய்து, அவர்கள் மேல் பாய்ந்தனன். நாற்படை களேயும் கொண்ட அவ்வரசர், வணிகர் குலத்தா னுகிய சீவகனே வெல்லுதல் எளிது என்ற இறு மாப்புடன் போரிட்டனர். ஆனுல் சீவகன் தன் குழு வினரோடு, வீறுகொண்டெழுந்த புலியைப் போல் பகைவரின் படையைக் கலக்கி, அவ்வரசர்களேப் புற முதுகிட்டு ஓடுமாறு துரத்தினன். மாநிலங் காக்கும்

மன்னர்களைத் தோற்றேடுமாறு செய்த சீவகனின் வீரத்தை என்னென்று போற்றுவது! அவர்கள் தோற்றேடியபின் சீவகன்தன் தோழருடன் காந்தருவதத்தையையும், அவளுடைய தோழியரையும் தன் மனைக்கு அழைத்து வந்தனன். காந்தருவதத்தையை வித்தியாதர நாட்டிலிருந்து அழைத்து வந்த சீதத்தன், தாரை வார்த்துக் கொடுக்கச் சீவகன் தத்தையை முறைப்படி மணந்து கொண்டான்.

சீவகன் தத்தையோடு இல்லற வாழ்வில் ஈடுபட்டிருந்தபோது, தத்தையின் தந்தையான கலுழவேகன், தரன் என்னும் வித்தியாதரனிடம் ஓர் ஓலையையும் சிறந்த பொருள்களையும் கொடுத்து, அவைகளைச் சீவகனிடம் சேர்ப்பிக்குமாறு பணித்தான். சீவகன் அவ்வோலையில் கலுழவேகன் தன் மகள் சீவகனை மணப்பாள் என்பதைத் தான் முன்னமே அறிந்ததைக் குறிப்பிட்டு, அவர்கள் சிறப்புற வாழும்படி வாழ்த்தியிருந்ததோடு, சீவகன் எது வேண்டினும் தான் உதவுவதாகவும் கூறியிருந்தான். சீவகன் அம் முடங்கலைத் தத்தையிடம் காண்பித்து அவளை மகிழ்வித்தனன்.

பின் சீவகன், தன் மாமனும் விதயநாட்டு மன்னனுமாகிய கோவிந்தரசனின் உதவியால் கட்டியங்காரனைக் கொன்று இராசமாபுரத்து அரசுகட்டில் ஏறினன். அவன் துறவுற்றபோது காந்தருவதத்தையின் மகனான சச்சந்தனுக்கே முடி சூட்டினன்.

---

# 5. மாசறு பொன்

வான் பொய்ப்பினும் தான் பொய்யாத பொன்னியாறு வளம்படுத்தும் **சோழநாடு** தொன்று தொட்டே சீரும் சிறப்பும் பெற்றுத் திகழ்ந்து வருகிறது. அந்நாட்டில் காவிரி கடலோடு கலக்கும் இடத்தில் **காவிரிப்பூம்பட்டினம்** அணி பெற அமைந்திருந்தது. அங்கு அரசர் இருக்கையும், ஆவண வீதியும், இன்னறுஞ்சோலையும், இணையிலா மாடங்களும் எழிலொடு விளங்கின.

அப்பழம்பதியில் வணிகர் குலத்தில் வண்மை வாய்த்த **மாநாய்கன்** என்பான் ஒருவன் இருந்தனன். அந்நல்லானுக்கு நன்மகளாகப்பிறந்தவள் **கண்ணகி.** அவள் திருமகளன்ன பொற்பும், அருந்ததியன்ன கற்பும் கொண்டிலங்கினள். ஆங்கு அவ்வுயர்குலத்தில் **மாசாத்துவான்** என்னும் மற்றொரு மாண்புமிக்க வள்ளல் வாழ்ந்தனன். இவனுடைய குலக்கொழுந்தாகத் தோன்றியவன் **கோவலன்.** அவன் செவ்வேள் போன்று இளமையும் இனிமையும் கொண்டிருந்தனன்.

இத்தகைய கோவலனுக்கும், கண்ணகிக்கும் நல்லதொரு நாளில் திருமணம் நடந்தது. அம்மன்றலுக்குப் பின், அவனும் அவளும், மலரும் மணமும் போலவும், தமிழும் இனிமையும் போலவும், ஈருடல் ஒருயிரென வாழ்ந்தனர். அவர்களுடைய மனையறம் மாட்சிமைப் படுதல் வேண்டுமென்று விரும்பிய பெற்றோர் அவ்விருவரையும் வேறொரு சிறந்த மாளிகையில் இருக்கச் செய்து,

இன்ப வாழ்வுக்கான எல்லாப் பொருள்களையும் அங்கு அமைத்தனர்.

காதல் மனையாளும் காதலனுமாக அவர்கள் மகிழ்ந்திருக்கையில், கோவலன்,

"மாசறு பொன்னே வலம்புரி முத்தே
காசறு விரையே கரும்பே தேனே
அரும்பெறற் பாவாய் ஆருயிர் மருந்தே"

என்று அவளைப் பலபடப் பாராட்டி, அவளுடன் இல்லறமென்னும் நல்லறத்தை இனிதே நடத்தி வந்தனன். இவ்வாறு சில ஆண்டுகள் சென்றன.

அக் காவிரிப்பூம்பட்டினத்தில் கலைத்திறம் மிக அமைந்த கணிகை மகள் **மாதவி** என்பாள் ஒருத்தி வாழ்ந்தனள். அவள் அறிவும் அழகும் பெற்று ஆடல்—பாடல்களில் வல்லவளாக விருந்தனள். கோவலன் அவளிடத்தில் அன்புகொண்டு தன் அன்பிற்குரிய மனையாளைக் கைவிட்டுக் கைப்பொருளெல்லாம் அக் கணிகைக்கீந்து, கூடாவொழுக்கங் கொண்டிருந்தனன். கண்ணகி தன் கணவனது பிரிவால் நேர்ந்த துன்பத்தை வெளியிடாதும், அவனை வெறுத்தலின்றியும் வாளாவிருந்தனள்.

இளவேனிற் காலத்தே சோழ மன்னர்கள் இந்திரனுக்கு விழா நடத்துதல் பண்டைய வழக்கம். அம்முறைப்படி சித்திரைத் திங்களின் நிறைமதி நாளில், காவிரிப்பூம்பட்டினத்தில் அவ்விழா சிறப்பாக நடந்தது. நகரத்து மக்களெல்லாம் ஆடையும் அணியும் அழகுற அணிந்து, அணிஅணியாகக் கடற்கரைக்குச் சென்றனர். காவிரி கடலோடு கலக்கும் காட்சி, கைப்புனைந் தியற்றாக் கவின்பெறு வனப்புடைத்தா

இருந்தது. அக்கண்கொள்ளாக் காட்சியைக் காண்டற்கும், விழா அயர்தற்கும் மாதவியும் கோவலனும் கடற்கரைக்குச் சென்றனர். ஆங்குள்ள தாழைச் சாலையின் அயலிலே, புன்னை நிழலிலே, புதுமணற் பரப்பிலே அவளும் அவனும் அமளிமிசை இருந்து யாழ் வாசிக்கத் தொடங்கினர். அவன் பலவகை வரிப் பாட்டுக்களைப் பாடி யாழை வாசித்தான். அவன் பாக்களெல்லாம் அவனுக்கு வேறு மகளிர்பால் விருப்பமுண்டென்று கருதுமாறு அகப் பொருட் சுவை தழுவியிருந்தன. ஊழ்வினை உருத்து வந்தூட்டலின், மாதவி, 'அவன் வேறு கருத்துடையான்' என்றெண்ணினள். ஆகவே, அவளும் கையிலிருந்த யாழை வாங்கி அகப் பொருட்சுவை அமைந்த பல வரிப் பாட்டுக்களைப் பாடி அதனை வாசித்தனள். அப்பாடல்களைக் கேட்ட கோவலன், "அவள் வேறொருவனிடம் காதல் கொண்டு பாடினள்" என்றெண்ணி வெறுப்புற்றுத் தன் வீடு நோக்கிச் சென்றான். மாதவியும் மனம்வருந்தித் தன் மனையகஞ் சென்றாள்.

கணவனை விட்டுப் பிரிந்திருந்த கண்ணகி கவலையோடிருந்தாள். மேலும் அவள் ஒரு தீக்கனவு கண்டு, அக்கனவின் திறங்களையெல்லாம் தன் தோழியாகிய தேவந்தியிடம் கூறினாள். அது கேட்ட தேவந்தி, "அம்மையே! கவலைப்படவேண்டாம். பொன்னியாறு புணரியோடு கலக்குமிடத்தில் சோம குண்டம், சூரிய குண்டம் என்னும் இரு பொய்கைகள் உள. அவற்றில் முழுகிக் காமவேள் கோட்டத்திற்குச் சென்று அவனை வழிபட்டால், துன்பமெல்லாம் நீங்கிக் கணவனோடு இன்பமாய் வாழலாம்" என்று

கூறினுள். கண்ணகி அதற்குடன்படாது, "தோழி! கணவனையல்லாது பிற தெய்வங்களைத் தொழுதல் எமக்கு இயல்பன்று" என்றுரைத்தனள்.

இவ்வாறிருக்கையில், கோவலன் தன் மனையினுட் புகுந்து, மனைவியின் வாடிய மேனியைக் கண்டு வருந்தியவனுய், "உழுவலன் புடையாய்! நான் மாதவியால் செல்வமெல்லாம் இழந்ததற்காக நாணம் அடைகின்றேன்" என்றனன். அது கேட்ட கண்ணகி, அவன் மாதவிக்கு மேலும் கொடுத்தற்குப் பொருளின்மையால் அவ்வாறு உரைத்தனன் என்றெண்ணி, "என்னிடத்தில் இன்னும் இரண்டு சிலம்புகள் உள்ளன. அவற்றைக் கொள்வீராக," என்று கூறினள். அப்பொழுது கோவலன் அச் சிலம்புகளையே முதலாகக்கொண்டு மதுரையில் வாணிகஞ் செய்து பொருள் திரட்டத் தான் விழைவதாக விளம்பிக் கண்ணகியையும் தன்னுடன் மதுரைக்கு வருமாறு அழைத்தனன்; அவளும் அதற்கு இசைந்தனள்.

அங்ஙனமே மதுரைக்குச் செல்வதற்காகக் கோவலனும் கண்ணகியும் அன்றிரவே கடையாமத்தில் ஒருவரும் அறியாதவாறு புறப்பட்டுத் தம் நகரத்துத் தெய்வங்களை யெல்லாம் வணங்கிக் காவிரியின் வடகரை வழியாக மேற்கு நோக்கிச் சென்றனர். அவ்வாறு செல்லும்போது ஒரு சோலையில் சமணசமயத் தவமுதியாளாகிய **கவுந்தியடிகளைக்** கண்டனர். பின்பு அக் கவுந்தியடிகளோடு மதுரையை நோக்கிச் சென்றனர். அவர் செல்லும் வழியில் **கௌசிகன்** என்னும் மறையோன் கோவலனைக் கண்டு, அவன்

பிரிவால் அவனுடைய பெற்றோரும் மற்றோரும் உற்ற துன்பத்தைக் கூறி, மாதவியின் ஓலையைக் கொடுத்தனன். கோவலன் அவ்வோலையைப் பிரித்துப் படித்து, மாதவி பிழையிலள் எனத் தெளிந்தனன். அவ்வோலையையே அவனுடைய தந்தைக்கு அனுப்புதற்கேற்றவாறு அதன் சொல்லும் பொருளும் அமைந்திருந்தன. ஆகவே அவன் அதைத் தன் தந்தையிடம் காட்டுமாறு கௌசிகனிடம் கொடுத்து, அவனை விரைந்து செல்லுமாறு பணித்தான். கோவலன், பின்பு கண்ணகியையும், கவுந்தியடிகளையும் அழைத்துக்கொண்டு சென்று, மதுரையின் மதிற்புறத்தே முனிவர் இருக்கையொன்றினையடைந்தான். அங்கு அவன் கண்ணகியைக் கவுந்தியடிகளிடம் ஒப்படைத்துத் தான்மட்டும் மதுரைக்குச் சென்று, அதன் சிறப்பையெல்லாம் கண்டு மீண்டனன். அப்பொழுது ஆயர் முதுமகளாகிய மாதரி என்பாள் அங்கு வந்தனள். கவுந்தியடிகள், கண்ணகியை அவளிடம் அடைக்கலமாக ஒப்புவித்தனள்.

கோவலனையும் கண்ணகியையும் மாதரி ஆயர் பாடிக்கு அழைத்துக்கொண்டு சென்று, புதியதோர் மனையின்கண் அவர்களை இருக்கச்செய்து, உணவு சமைத்தற்குரியபொருள்களையெல்லாம் கொடுத்துத் தன் மகள் ஐயை என்பவளைக் கண்ணகிக்குத் துணையாக வைத்தனள். கண்ணகி, கருத்தோடு தன் காதலனுக்கு உணவாக்கிப் படைத்தபோது, கோவலன் அவ்வமுதுண்டு இனிதிருந்தனன். அவ்வாறிருக்கையில், அவன் தன் குற்றங்களையெல்லாம் கூறி அவற்றைப் பொருட்படுத்தாமல் கண்ணகி உவந்து

தன்ஞேடு மதுரைக்கு வந்ததற்காக அவளேப் பாராட்டினன். பின் அவளுடைய சிலம்புகளுள் ஒன்றைக் கொண்டுபோய் விற்று வருவதாகவும், தான் வருமளவும் தனிமையால் வருந்தாதிருக்குமாறும் கூறி, ஒரு சிலம்பை வாங்கிக் கொண்டு, அவ்விடத்தினின்றும் நீங்கி மதுரையின் ஆவண வீதியினுள்ளே சென்ருன்.

அவ்வாறு அவன் கடைத்தெருவில் செல்லுங்கால் அரண்மனையில் பணியாற்றும் பொற்கொல்லர் ஒருவர் தன்னேப் பலர் சூழ்ந்து வர அத்தெருவில் வந்து கொண்டிருந்தார். அவர் அரசியினுடைய உயர்ந்ததொரு சிலம்பைத் திருடி, அக்குற்றத்தைப் பிறர்மீது சுமத்துதற்காக காலங் கருதியிருந்தனர்.

கோவலன் அவரிடஞ் சென்று, "அரசனுடைய தேவி அணியத்தக்க சிறப்பினேயுடையதொரு சிலம்பை நீர் விலே மதிப்பீரோ?" என்று வினவினன். அப்பொற்கொல்லர், தாம் அவ்வாறு செய்தற்கியலும் என்று பணிவோடு விடையளித்தார். ஆகவே கோவலன் தன் மனேவியின் ஒற்றைச் சிலம்பை அவரிடம் காட்டினன். அப்பொற்கொல்லர் அச் சிலம்பை நோக்கி, அதன் வேலேப்பாட்டை நன்குணர்ந்தவராய், "இது அரசன் தேவி அணிதற்கேற்றது. நான் இதை அரசற்கறிவித்து வருமளவும் நீர் ஈண்டு என் மனேயின் பக்கல் இருப்பீராக" என்று கூறி அரண்மனேக்குச் சென்ருர்.

பொற்கொல்லர் அரண்மனேக்குச் சென்று, மன்னனேக் கண்டு வணங்கித் துதித்து, "ஐய! முன்பு கன்னக்கோல் முதலியன இல்லாமலே, மந்திரத்தைப் பயன்படுத்தி, வாயிலாளரை மயங்கித் தூங்கும்படி

செய்து, அரண்மனையினின்றும் தேவியின் சிலம்பைத் திருடிய கள்வன், அடியேனுடைய வீட்டில் இப்பொழுது அச் சிலம்புடன் வந்திருக்கிறான்," என்று கூறினார். வினை பலிக்கும் காலமாதலால், அரசன் விளைவதையறியானாய், யாதும் ஆராய்ச்சியின்றியே காவலாளரை நோக்கி, "என் மனைவியின் சிலம்பு இப்பொற்கொல்லர் கூறிய கள்வன் கையகத்ததாயின், அவனைக் கொன்று சிலம்பைக் கொண்டு வருக," என்று கட்டளையிட்டு விரைந்து அரசியின் அந்தப்புரம் சென்றான்.

பொற்கொல்லர், தான் எண்ணியபடி முடிந்ததென்று மகிழ்ந்து கோவலன் இருக்குமிடஞ் சென்று, உடன் வந்த கொலையாளரைச் சிலம்பு காண வந்தவர் என்று அறிமுகப்படுத்தினார். பின், கோவலனிடமிருந்த சிலம்பைப் பொற்கொல்லர் கொலையாளருக்குக் காட்டுவித்து, அச்சிலம்பிற்கும் அரசியின் சிலம்பிற்கும் இருந்த ஒப்புமைகளைக் கூறினார். அக்கொலையாளருள் ஒருவன் கோவலனது தோற்றப்பொலிவையும், ஏனைய சிறப்பியல்புகளையுங் கண்டு ஐயுற்று, "அவன் கள்வன் அல்லன்" என்று கூறினன். அது கேட்ட பொற்கொல்லர் கோவலனைக் கொல்லாது விட்டால் தன் குற்றம் வெளிப்பட்டுவிடும் என்று அஞ்சியவராய், "இவன் கள்வன்" என்று பல காரணங்கள் காட்டி வற்புறுத்திக் கூறினார். அவ்வமயம் அக்கொலையாளருள் கொலைக்கஞ்சாதவனாகிய ஒருவன் வாளை உருவிக் கோவலனை வெட்டி வீழ்த்தினான்.

இவ்வாறு கோவலன் கொலையுண்டபோது, கண்ணகி இருந்த இடைச்சேரியிற் பல உற்பாதங்கள்

நிகழ்ந்தன. இவற்றைக் கண்ட இடையரும், ஆய்ச்சியரும் ஏதோ ஒரு கொடுந்துன்பம் தங்களுக்கு வரும் என்று உணர்ந்தனர். உற்பாத சாந்தியாக, இடைக் குலப் பெண்கள் கண்ணனை நோக்கிக் குரவைக் கூத்தாடினர்.

கூத்தின் முடிவில் மதுரை நகரிலிருந்து வந்த ஒரு பெண் மிகவும் வருத்தத்தோடு காணப்பட்டாள். அவள் வாய்திறந்து- பேசவியலாது வருந்தினாள். கண்ணகி அப்பெண்ணை வற்புறுத்திக் கேட்ட பொழுது, அவள் விம்மிக்கொண்டே, "கோவலன் சிலம்பு திருடியவன் என்று குற்றஞ் சாட்டப்பட்டு, அரசன் ஏவலாளரால் கொல்லப்பட்டான்" என்று கூறினள். அது கேட்ட கண்ணகி பதைபதைத்து, நிலைகுலைந்து புலம்பிச் சூரியனை நோக்கி, "செங்கதிர்ச் செல்வனே! நீயறிய என் கணவன் கள்வனோ?" என்றனள். அப்போது, "கருங்கயற்கண் மாதராய்! நின் கணவன் கள்வனல்லன். அவனைக் கள்வன் என்ற இக்கொடிய நகர் விரைவில் நெருப்புக்கு இரையாகும்," என ஒரு குரல் உண்டாயிற்று. கண்ணகியின் சீற்றம் பொங்கியது.

பொங்கிய சீற்றத்தோடு கண்ணகி தனது மற்றொரு சிலம்பைக் கையிலேந்தியவளாய்த் தன் கணவன் கள்வனல்லன் என்றும், தன் சிலம்பை விற்கவே வந்தான் என்றும் கூறிக்கொண்டே வீதி வழியே சென்றாள். அவளைக் கண்டோர் அனைவரும் கலங்கினர். அவள் அழுதுகொண்டே சென்று, வெட்டுண்டு கிடந்த கோவலனைச் சிலர் காட்டக் கண்டு, பெருந்துயருற்றுப் புலம்பி, அவன் உடம்பினைத்

தழுவிக் கொண்டாள். அக்கணமே அவன் உயிர் பெற்று எழுந்து, "மதியன்ன முகம் மாசுற்றதே" என்று வருந்தி, அவள் கண்ணீரைக் கையால் மாற்றித் தேறுதல் கூறி மண்ணில் விழுந்து மாண்டனன்.

கற்பின் செல்வியாகிய கண்ணகி, அரசன் முன் சென்று வழக்குரைத்து, உண்மையை விளக்க விழைந்தனள். எனவே, அவள் அரசன் அரண்மனையை நோக்கிச் சென்றாள்.

பாண்டியன் மனைவி, தான் கண்ட தீக்கனாக்களைக் கணவனுக்கு கூறிக்கொண்டிருந்தாள். அவ்வேளையில் கண்ணகி சினந் தணியாதவளாய் அரண்மனை வாயிலையடைந்து, "முறை தவறிய மன்னனது வாயிற் காவலனே!" என வாயிலோனை விளித்துத் தனது வரவை அரசனுக்கு அறிவிக்கச் சொன்னாள். வாயிற் காவலன் அவள் தோற்றத்தைக் கண்டு பயந்து அரசனிடத்தில் அவள் வரவைக் கூறினான்.

பின் அரசன் ஆணையின்படி கண்ணகி அவன் முன் சென்றனள். அரசன் அவளை நோக்கி, "கண்ணீரைச் சிந்திக்கொண்டு எம்முன் வந்த நீ யார்?" என்று வினவினன். கண்ணகி, "தேரா மன்னா! புறாவின்புன்கண் தீர்த்தசிபியும், பசுவின் துயரைப் போக்கத் தன்—அருமந்த மைந்தனைத் தேர்க்காலிலிட்ட மனுச்சோழனும் செங்கோல் செலுத்திய புகார் என் பதியாகும். அப்பதியை விட்டு ஊழ்வினையால் உன் நகரையடைந்து, கொலைக்களப்பட்ட கோவலன் மனைவி யான். என் பெயர் கண்ணகி" என்று கூறினாள். அது கேட்ட பாண்டியன், "கள்வனைக் கோறல்

கொடுங்கோலன்று, வெள்வேற் கொற்றங்காண்'' என்றனன். கண்ணகி மேலும் சீற்றங்கொண்டு ''என் கணவன் அல்லன் கள்வன். என் சிலம்பினுள் இருக்கும் பரல் மாணிக்கம்,'' என்றனள். அரசன், தன் தேவியின் சிலம்பின் பரல் முத்தென்று சொல் லிக் கோவலனிடமிருந்து பெற்ற சிலம்பைக் கொண்டு வருமாறு செய்தான். கண்ணகி, அச் சிலம்பையுடைத்த போது அதனுள்ளிருந்த மாணிக் கப்பரல் மன்னன் வாயில் தெறித்து அவன் பிழையை உணர்த்திற்று.

மணி கண்ட மன்னன், தாழ்ந்த குடையனுய்த் தளர்ந்த செங்கோலனுய் நிலை குலைந்து, ''பொற் கொல்லர் சொற்கேட்ட யானே அரசன்! யானே கள்வன்! புகழ்பெற்ற பாண்டிய குலம் என்னுற் பழியுற்றதே! என் ஆயுள் அழிக!'' என்றுரைத்துத் துயரினுல் தன் அரசு கட்டிலிலேயே மயங்கி வீழ்ந்து உயிர் துறந்தான். அரசன் மாய்ந்த பின், அரசியும் தன் உயிரைக்கொண்டு அவன் உயிரைத் தேடுபவள் போல் உயிர் நீத்தாள்.

மன்னன் மாய்ந்த பின்னும் கண்ணகி சீற்றந் தணியாது, மதுரைத் தெரு வழியே ஒரு மாபெருந் தெய்வம்போல் சென்று, ''யான் கற்புடைப் பெண் என்பது உண்மையாயின் இவ்வூரை அழிப்பேன்'' என்று வஞ்சினம் உரைத்தாள். உடனே மதுரையை மும்முறை வலம் வந்து, கதிரவனை நோக்கிச் ''செங் கதிர்ச் செல்வனே, குற்றமற்ற என் கணவனைக்கொல் வித்த இவ்வூர் தீக்கு இரையாகட்டும்'' என்று வேண் டினள். அவள் வேண்டுகோளின்படியே அந்நகரில் தீப்பற்றிக்கொண்டு பல விடங்களையும் எரித்தது.

அத்தீயைப் பொறுக்கலாற்ருத மதுராபதித் தெய்வம் கண்ணகியை நோக்கி, "உன் கணவன் நிலைக்கு நான் பெரிதும் வருந்துகிறேன். பாண்டிய மன்னர் கொடுங்கோன்மையுடையவர் அல்லர். இந் நெடுஞ்செழியனும், மறந்தும் தீமையைச் செய்யாத வனே. உன் தலைவன் கொலையுண்டதற்கு அவனது ஊழ்வினையே காரணம். அவ்வரலாற்றைக் கூறு வேன்! கேட்பாயாக! முன்பு **கலிங்க** நாட்டில் இரண்டு அரசர்கள் இருந்தனர். **வசு** என்பவன் **சிங்கபுரத்**தரசன்; **குமரன்** என்பவன் **கபிலபுரத்** தரசன். இருவரும் தம்முட் பகை கொண்டிருந் தனர். அவ்வமயம் **சங்கமன்** என்னும் வணிகன் சிங்கபுரத்துக் கடை வீதியில் பண்டம் விற்றுக் கொண்டிருந்தான். அந்நகரத்தரசனிடம் பணியாள ஞக விருந்த **பரதன்** என்பவன் அச்சங்கமனைப் பகைவனுடைய ஒற்றன் என்றெண்ணி, அவனை அரசனிடம் பிடித்துச் சென்று கொலை செய்வித் தான். அச்சங்கமன் மனைவியாகிய **நீலி** என்பவள் பெரிதும் வருந்திப் பதினன்கு நாள் பல இடங்களி லும் அலைந்து பின்பு ஒரு மலை மீதேறி, 'இத்துன் பத்தை எமக்குச் செய்தவர் மறு பிறவியில் இத் துன்பத்தை அடைவார்களாக' என்று கூறி இறந் தாள். அப்பரதனே கோவலஞகப் பிறந்தான். அச் சாபந்தான் உன் துன்பத்திற்குக் காரணமாயிற்று. நீயும் பதினன்கு நாள் வருந்திப் பின்பு உன் கணவ னைச் சேர்வாய்," என்று சொல்லிக் கண்ணகியைத் தேற்றிச் சென்றது.

கண்ணகி மதுரையை விட்டு நீங்கி, வையைக் கரை வழியே பதினன்கு நாட்கள் நடந்து சென்று,

மலை நாட்டை யடைந்தாள். அங்கு அவள் முருகன் தங்கும் திருச்செங்குன்றென்னும் மலை மீதேறி வேங்கை மரத்தின் நிழலிலே நின்றனள். குறித்த நேரத்தில் கோவலன் தெய்வ வடிவத்துடன் விமானத்தில் வந்து இறங்கினான். அவள் தன் கணவனைக் கண்டு மகிழ்ந்து அவனுடன் விமானமேறி, அமரர் போற்ற விண்ணுலகமடைந்தாள்.

கண்ணகி வேங்கை மரத்தின் நிழலில் இருந்த போது, அம் மலைவாழ் வேடுவர் சிலர் அவளைக் கண்டு, "வள்ளி போலும் அம்மையே! நீ யார்?" என்று கேட்டனர். அதற்கவள்,

'மணமதுரை யோடு அரசு கேடுற
வல்வினை வந்து உருத்தகாலை
கணவனை அங்கு இழந்து போந்த
கடுவினை யேன்யான்'

என்று கூறினள். அதற்குள் அமரர் போந்து மலர் மழை பொழிந்து, கோவலனைக் கண்ணகிக்குக் காட்ட, அவள் கணவனோடு விமானமேறித் துறக்கம்புக்காள். இவற்றை யெல்லாம் கண்ட வேடுவர் வியப்பும் உவப்பும் கொண்டு, "இவள் நமக்கு ஒரு பெருந்தெய்வம் ஆவள்," என்று கூறி, ஏனைய வேடுவர்களையும் அழைத்துப் பல்லியம் முழக்கிக் குரவைக் கூத்தாடினர்.

இவ்வாறு பத்தினித் தெய்வத்தைப் பாராட்டி வழிபட்ட வேடுவர்கள், தாம் கண்ட காட்சியைத் தம்முடன் அரசன் **சேரன் செங்குட்டுவனுக்குக்** கூற விழைந்தனர். ஆகையால் அவர்கள் மலைபடு பொருள்களை அன்புக் காணிக்கையாகக் கொண்டு

அரசனைக் காணச் சென்றனர். சேரன் செங்குட்டுவனும் மலைவளங் காணும் பொருட்டுத் தன் மனைவி **வேண்மாளோடு** படைகள் புடைசூழ வந்து, பேராற்றங்கரையிலுள்ள மணல் மேட்டில் இருந்தனன். அப்பொழுது வேடுவர்கள் செங்குட்டுவன் முன்சென்று, அவனடி வணங்கி வாழ்த்தித் தாங்கள் மலைமீது மர நிழலில் கண்ட காட்சியைப் பற்றிக் கூறினார்கள்.

அவ்வமயம் அங்கிருந்த **சாத்தனார்** என்னும் செந்தமிழ்ப் புலவர் அரசனுக்குக் கண்ணகியின் வரலாறு முழுவதையும் கூறினர். பின் செங்குட்டு-வன் தன் தேவியை நோக்கி, "நன்னுதலாய்! கணவனுடன் உயிர் நீத்த பாண்டிமாதேவியும், கோபத்தோடு நம் நாடு நோக்கி வந்த கண்ணகியும் ஆகிய இருவருள் யார் வியக்கத்தக்கவர்?" என்று வினவினான். மனைவி வேண்மாள், "தன் காதலன் துன்பம் காணாது, உயிர் நீத்த பாண்டியன் மனைவி வானத்தில் சிறப்பெய்துக. நம் நாட்டை நோக்கி வந்த பத்தினியை நாம் வழிபடுதல் வேண்டும்," என்று இயம்பினள்.

பத்தினிக் கடவுளுக்குப் படிவம் அமைத்து வழிபட வேண்டும் என்று செங்குட்டுவன் கருதினான். ஆகவே, அவன் அமைச்சர், சேனாதிபதி ஆகியோருடன் ஆராய்ந்து, இமயத்தில் கல்லெடுத்து, கங்கையில் நீராட்டிச் சிலை அமைக்க முடிவு செய்தான். அப்பொழுது **வில்லவன் கோதை** என்ற சேனாதிபதி வடநாட்டு மன்னருக்கெல்லாம் சேரர் பெருந்தகை இமயம் நோக்கி வரப் போவதைத் திருமுகத்தின் வாயிலாகத் தெரிவிக்கவேண்டும்

எனக் கூறினன். அது கேட்ட அழும்பில்வேள் என்னும் அமைச்சன், "நம் தலைநகராகிய வஞ்சியிலே எல்லா நாட்டு ஒற்றர்களும் இருக்கின்றனர். இங்கே முரசறைந்து நம் வடநாட்டுச் செலவைத் தெரிவிப்பின், ஒற்றர் மூலம் எல்லா நாட்டு மன்னர்களும் அறிந்து கொள்வார்கள்," என்று கூறினன். செங்குட்டுவனும் அவ்வாறு செய்தற்கு இசைந்து பேராற்றங் கரையினின்றும் புறப்பட்டு வஞ்சிமா நகரடைந்தான்.

அந்நகரில் அரசனது வடதிசைச் செலவு குறித்தும், வடவேந்தர் திறையைக் கொடுத்துப் பணியாராயின் அவருக்கு நேரும் தீங்குகள் குறித்தும் முரசறையப்பட்டது. பின் சேரன் செங்குட்டுவன் தன் சேனைத் தலைவர்களை நோக்கி, "ஆரிய மன்னர் பலர் தம் நாட்டுத் திருமண மொன்றில், தமிழர் ஆற்றலை இழந்தனர் என இங்கு வந்த இமயத்து வாழ்பவரால் அறிந்தோம். அவ் விழிமொழி நமக்கும், சோழ பாண்டிய வேந்தர்கட்கும் இகழ்ச்சியை விளைவிப்பதாகும். ஆகையால் அவ்வாரிய அரசர் முடிமேல் கண்ணகியின் படிவம் சமைத்தற்குரிய கல்லை ஏற்றிக்கொண்டு வருவேன். இல்லையேல் யான் கொடுங்கோலனாகக் கடவேன்," என்று கூறினன்.

செங்குட்டுவனுடைய வடநாட்டுச் செலவுக்குரிய, ஏற்பாடுகள் எல்லாம் செய்யப்பட்டன. **சேரமான்,** வஞ்சி நகரின் கடவுளர்களை வணங்கிச் சேனையோடு புறப்பட்டு வடநாடு நோக்கிச் சென்றான். பல ஆரிய மன்னர் அவனை வரவேற்றுச் சிறப்புச் செய்தனர். ஆயினும் கனகனும், விசயனும் வேறு சில வட அரசர்களைக் கூட்டிக் கொண்டு,

கங்கைப் பேராற்றங் கரையில் செங்குட்டுவனை எதிர்த்தனர். செங்குட்டுவன் வீரத்தோடு போரிட்டுப் பதினெட்டு நாழிகையில் பகைவரை முறியடித்தான். கனக, விசயரும் பிறரும் சிறைப்பட்டனர். இங்ஙனம் செங்குட்டுவன் வடநாடு முழுவதும் தன் அடிக்கீழ்ப்படுத்தினன்.

சேரர் பெருமானின் ஆணைப்படி, சேனைத் தலைவனுகிய வில்லவன் கோதை, படையுடன் சென்று, இமயமலையினின்றும் பத்தினிக் கடவுளின் படிவம் சமைத்தற்குரிய சிலையைக் கொணர்ந்தான். செங்குட்டுவன் அச்சிலையைக் கனக, விசயரின் முடிமேல் ஏற்றிக் கொண்டு, கங்கை ஆற்றை அடைந்து அதனை நீர்ப்படை செய்தான். பின்பு அவன் பாடியில் தங்கியிருந்து, படைத்தலைவர்களுக்கும் வீரர்களுக்கும் வாகைப் பூக்களை வழங்கினன்.

செங்குட்டுவன் கங்கைக் கரையில் இருந்தபோது **மாடலன்** என்னும் மறையோன் அங்கு வந்து அரசனை வணங்கி,

"வாழ்க எங்கோ மாதவி மடந்தை
கானற்பாணி கனக வியசர்தம்
முடித்தலை நெரித்தது"

என்று கூறி, அதன் பொருளையும் விளக்கினன். மேலும் அவன் சோழ நாட்டிலும், பிறவிடங்களிலும் கோவலனும், கண்ணகியும் மாய்ந்தபின் நடந்த நிகழ்ச்சிகளை எல்லாம் கூறித் தான் பாவம் போக்கக் கங்கையாட வந்ததையும் விளக்கினன். கோவலனும், கண்ணகியும் மாய்ந்த பின் அடைக்கலப் பொருளாகிய அவர்களை இழந்ததற்காக, மாதவி வருந்தி நள்ளிரவில் எரி மூழ்கி இறந்தாள். சமணத் துறவியான கவுந்தியடிகளும் தன்னுடைய தொடர்பால் கோவலனுக்கும், கண்ணகிக்கும் தீங்கு நேர்ந்தது என்று

எண்ணி, உண்ணு நோன்பிருந்து உயிர் விட்டனர். கோவலன், கண்ணகி ஆகிய இருவருடைய தந்தையரும் துறவிகளாயினர். அவர்களுடைய தாய்மார் துன்பம் தாங்காது இறந்து போயினர். மாதவி பிக்குணியாகிப் பௌத்த விகாரத்தை அடைந்தனள். பாண்டியன் நெடுஞ்செழியன் மாய்ந்தபின் இளவரசனுகிய **வெற்றிவேற் செழியன்** என்பான் மதுரைக்கு வந்து, கண்ணகியின் சீற்றத்தைத் தணிவித்து, அரசனுகி ஆண்டு வருகிருன் என்று மாடலன் செங்குட்டுவனுக்குக் கூறினுன்.

பின் செங்குட்டுவன் தன் தலைநகராகிய வஞ்சியை அடைந்து, பத்தினிக் கோட்டம் பாங்குற அமைத்து, அதில் கண்ணகி உருவம் வடித்த அழகிய சிலையை அமைத்து, அதை நீராட்டி, அணி பல அணிந்து, முறைப்படி வணங்கிப் பத்தினி விழா நடத்தினன். அவ்விழாவின் போது பல நாட்டு மன்னரும், மக்களும் வந்திருந்தனர். கண்ணகியின் செவிலித்தாயும், அவளது அடித்தோழியும், தேவந்தி என்னும் தோழியும், மாதரி மகள் ஐயையும் அங்கு வந்து கண்ணகியின் தெய்வ உருவைக் கண்டனர். அப்பொழுது வானத்தில் மின்னற்கொடி போன்ற ஓர் உருவம் தோன்றி, ''பாண்டியன் தீதிலன்; நான் அவனுக்கு மகள் முறையாவேன். இச்சிறப்பினைச் செய்த சேரர்பெருமானது மலையில் என்றென்றும் தங்கிவிளையாடல் புரிவேன்,'' என்று கூறிற்று. சேரன் செங்குட்டுவன் அப்பத்தினிக் கடவுளுக்கு நித்திய பூசையும், சிறப்பு விழாக்களும் செம்மையாக நடைபெறுவதற்காக வேண்டிய ஏற்பாடுகளைச் செய்து, அத்தெய்வத்தைப் பிற மன்னர்கள் தம் நாட்டிலும் எழுந்தருளுமாறு வேண்டிய போது, அத்தெய்வம் அதற்கிணங்கியதற்கு அறிகுறியாக ''வரம் தந்தேன்'' என்ற குரல் வானில் எழுந்தது.

---

# பயிற்சிக்கு உரிய மாதிரி வினாக்கள்

குறிப்பு : பின்வரும் மாதிரி வினாக்களுக்கு உரிய விடைகள் ஒவ்வொன்றையும் ஒன்றரைப் பக்கத்திற்குக் குறையாமலும், இரண்டு பக்கங்கட்கு மிகாமலும் எழுத வேண்டும். அதற்கு ஏற்ற முறையில் பயிற்சி பெறுக.

கார் காதை

1. லியாண்டஸ் மன்னனும் பாலிக்செனீசும்.
2. ஹெர்மியானின் குணச் சிறப்புக்கள்.
3. பாலினாவின் உயர் பண்பு.
4. கேமில்லோவும் ஆண்டிகோனசும்.
5. பிளாரிசெல்லும் பெர்டிடாவும்.

வசந்தசேனை

1. வசந்தசேனையும் சாருதத்தனும்.
2. சகாரனுடைய முறை தவறிய செய்கைகள்.
3. சாருதத்தன் காப்பாற்றப்பட்ட முறை.

உதயணன்

1. உதயணனும் யூகியும்.
2. உதயணனும் வாசவதத்தையும்.
3. வாசவதத்தையும் பதுமையும்.
4. யூகியின் வீரச் செயல்கள்.
5. உதயணனின் வீரமும் அரசியல் சிறப்பும்.

சீவகனும் காந்தருவதத்தையும்

1. சச்சந்தன் வீழ்ச்சியும் கட்டியங்காரன் எழுச்சியும்.
2. சீவகன் இளமைப் பருவம்.
3. சீவகனும் ஆனிரை மீட்சியும்.
4. சீவகன் காந்தருவதத்தையை மணந்தது.
5. சீவகனும் கட்டியங்காரனும்.
6. விசயையும் சச்சந்தனும்.

மாசறு பொன்

1. கோவலன் இல்லற வாழ்வு.
2. கோவலனும் மாதவியும்.
3. கண்ணகி வழக்கும் பாண்டியன் முடிவும்.
4. கோவலன் முடிவிற்குக் காரணமான நிகழ்ச்சி.
5. செங்குட்டுவனும் பத்தினி வழிபாடும்.
6. செங்குட்டுவன் வீரம்.

